

வண்ண விளக்குகளால் அலங்கரிக்கப் பட்ட ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரம்.

ஸ்ரீ அன்னமாச்சார்யா சந்ததியினரை, தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. சி. அண்ணராவ் அவர்கள் கௌரவவித்தார்

அண்மையில் திருப்பதியில் ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் நடைபெற்ற ஸ்ரீ தாள்ளபாக்க அன்னமாச்சார்யாவின் 30-வது நினைவு நாள் விழாவின் சிறப்பு நிகழ்ச்சிகள் இப்பக்கத்தில் வெளியிடப்பட்டுள்ளன.



ஸ்ரீ அன்னமய்யாவின் புதிய கவிதை தொகுதிகளை தி.தி.தே. செயலாட்சித் தலைவர் வெளியிடுகின்றார்



ஆந்திர அரசவைக் கலைஞரும், பிரபல தெலுங்குத் திரைப்படக் கவிஞருமான திரு. டாக்டர். தாஸரதி அவர்கள் விழாவிற்குத் தலைமை வகித்தார்.





நின்னருளாங் கதியின்றி மற்றொன் றில்லேன்
நெடுங்காலம் பிழைசெய்த நிலைகழிந்தேன்
உன்னருளுக் கினிதான நிலையுகந்தேன்
உன்சரணே சரணென்னும் துணிவு பூண்டேன்
மன்னிருளாய் நின்றநிலை யெனக்குத் தீர்த்து
வானவர்தம் வாழ்ச்சிதர வரித்தே னுன்னை
இன்னருளா லினியெனக்கோர் பரமேற்றாமல்
என்திருமால்! அடைக்கலங்கொ ளென்னை நீயே.

—அமிருதாசுவாதிநீ-31. (ஸ்ரீ தேசிகப்ரபந்தம்).




# ஸப்தகிரி



மலர்: 9 ஜுலை 1978 இதழ் 2

தனிப்பிரதி 50 காசு.
வருடச் சந்தா ரூ. 6

சிறப்பாசிரியர்:
திரு. பி. எஸ். ராஜகோபாலராஜு,
ஐ. ஏ. எஸ்.,
செயலாட்சித்தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பாராவ், எம். ஏ.
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு,
Marketing Officer.
Publication Section.
T. T. D. Press Compound.
TIRUPATI-517501.

## உள்ளுறை

பக்கம்



அட்டைப்படம்: ஸகஸ்ர கலஸாபிஷேகம்.

# ஆசிரியர் உரை

இன்றைய மாநிட வாழ்க்கை குழப்பங்களும், சிக்கல்களும் நிறைந்து அமைதியிழந்த நிலையில் விளங்குகிறது. இருப்பவனும், இல்லாதவனும் இருவருமே ஒவ்வொரு நாளையும் ஆவலோடும், அச்சத்தோடுமேதான் கடத்துகின்றனர். ஒரு நாடு மற்றொரு நாட்டுடன் சந்தேகக் கண்களோடுதான பழகுகின்றது. ஆம். இன்றைய நாகரிக உலகம்—விஞ்ஞான உலகம்—எளிமை, நேர்மை, இனிமை, வாழ்க்கை லட்சியம ஆகியவற்றை இழந்து நிற்கின்றது. இவ்வாறு 'நோய்' கொண்ட இவ்வுலகம் உய்வது எங்ஙனம? அவ்வுலகத்தில் அன்றாடப் பிரச்சனைகளால் அல்லலுறும தனி மனிதன் மனம் நிறைவு பெறுவது எப்போது?

கலியுக மனிதனின் நிலையை துவாபரயுகக் கண்ணன் அன்றே எண்ணிப் பார்த்தான போலும். குருக்ஷேத்திரப் போர்க்களத்தின்கண்ணே, பார்த்தனுக்குக் கூறுவதுபோல் மக்களுக்கு இறைவனான கண்ணன, மனிதனின் உலகாயுத ஆன்மீகப் பிரச்சனைகளுக்கு வழிகாட்டுகிறான். அன்று நாரணனுக்கும், நரனுக்கும் நடந்த விவாதங்கள் யாவும், வாழ்க்கையின் எல்லா நிலைகளில உள்ள எல்லா வகை மனிதர்களிடையே நடைபெற்றுக் கொண்டிருக்கும பிரச்சனைகளுக்கான விடைகளாகும். அவ்விடையின் பயனே கீதையாகும கீதை எனும் கருத்துக் கருவூலத்திற்குத திறவு கோலாக கண்ணன் விளங்கினான். அக்கீதை இன்று, இன்றைய உலக நாகரிக மோகத்தில் மூழ்கித் தட்டுத்தடுமாறிக் கொண்டு செல்லும் மனிதனுக்கு ஊன்று கோலாகத் திகழ்கின்றது. தனி மனிதனைத் திருத்தி அவன்மூலம் ஒரு திருந்திய உலகத்தைப் படைக்கும் வாய்ப்பினையும் கீதை தந்துள்ளது. இந்து மதத்தின் அடிப்படைக் கொள்கைகளை விரிவாகக் கொண்டு ஞானத்தின் கருவூலமாக, வற்றாத ஆன்மீகப் பெட்டகமாக, வேத உபநிடதங்களின் சாரமாக உலகப் பொது மறையாகக் கீதையை வியாஸர் அளித்துள்ளார். அது கூறும் கருத்துக்கள் எந்தவித தனி இனத்திற்கோ, சமயப் பிரிவிற்கோ, நாட்டிற்கோ காலத்திற்கோ உரிமையானவை அல்ல. அதன் பெருமையை உணரப்பெற்றுத்தான் கீதை இன்று பல மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. விஞ்ஞானத்தின் தந்தைகளாக விளங்கிய மாபெரும் மேலைநாட்டு அறிஞர்களின் மேசைகளை அலங்கரித்தப் பெருமை கீதைக்கு உண்டு. ஒருமுறை காந்திஜி அவர்கள் இங்கிலாந்து நாட்டில் உள்ள புகழ்பெற்ற நூலகத்தைப் பார்வையிட்டபோது, அங்குள்ள அலுவலரை 'தற்போது வாசகர்களால் விரும்பி எடுத்துச் செல்லப்படும் நூல் எது' என வினவ, அவர் 'கீதை' என மொழிந்தாராம். ஆகவே முகமதியருக்கு ஒரு குரானைப் போன்று, கிருஸ்துவருக்கு ஒரு பைபிளைப் போன்று இந்துக்களுக்கு மட்டுமின்றி உலகத்தாருக்கு கீதை ஒரு பொது மறையாக விளங்குகின்றது.

இந்தியாவின் ஒற்றுமைக்கும் அதன் பண்பாட்டிற்கும் உதவும் கீதை தன்னுடைய 697 ஸ்லோகங்களின்மூலம் உலகிற்கு கூறுவதுதான் என்ன? எந்த ஒரு பிரச்சனைக்கும் உடனடியாக முடிவு தர முடியாமல் அதனை அணுகும் முறை தெரியாமல் கல்லளவு உள்ள பிரச்சனையை மலையெனக் கொண்டு தத்தளிக்கும் மனிதன் இன்று மனவமைதி இழந்து தவிக்கின்றான். அளவு கடந்த உலகாயுத ஆசைகளுக்குப் பலியாகி தன்னுள் உறையும் ஆன்மீகப் பண்புகளை மறந்து மதி கெட்டு அலைகின்றான். பேராசையால் கடமை உணர்வு மறந்து குறுகிய மனப்பான்மையுடன் பிரச்சனைகளை எதிர் நோக்குகின்றான். விளைவுகள் சாதகமாக இருந்தால் தனனிலை மறந்து நான் எனது எனும் ஆணவப்பிடிக்குள் அகப்பட்டு அட்டகாசங்கள் பல புரிகின்றான். விளைவுகள் பாதகமாக அமையின் உலகம் அவனுக்கு பொய்யாகத் தெரிகின்றது. ஆகவே பல்வேறு உணர்வு நிலைகளால் தாக்கப்பட்டு நிலைதடுமாறும் மனிதனுக்குக் கீதை ஒரு அருமருந்தாக திகழ்கின்றது. இன்று மனிதன் அநுபவிக்கும் உணர்வுகளைததான் அன்று அர்ஜுனன் போர்க்களத்தே அனுபவித்தான். அன்று அவனுக்கு வழிகாட்டியது கீதையின் நாயகன் கண்ணன்! இன்று நமக்கு ஒளிதருவது அந்நாயகன் தந்த கீதை. கடவுள், உலகம், மனிதன் ஆகிய மூவரையும் இணைத்து, மனிதன் உலகத்திற்கண் இருக்கும்போது கடமையை சரிவர ஆற்ற வேண்டியதன அவசியத்தைக் கூறி, கடமையின்பால் செலுத்தும் அன்பே பக்தியோகத்திற்கு முதல்படி என அறிவித்து, மனிதனுள் உறையும் தெய்வ உணர்வுகளைத் தட்டி எழுப்பி பரம்பொருள்பற்றிய பேருண்மையைக் காணச்செய்து, தான் கண்ட அவ்இறைவனை மற்ற உயிர்களிடத்தும் காணச் செய்து மனிதனை தெய்வ நிலைக்கு உயர்த்துவது கீதை. காமம், ஆணவம், பேராசை, கோபம், பொறாமை, பகைமை போன்ற மனிதனின் ஆன்ம வாழ்வுக்குத் தடையாக விளங்கும் அகப்பண்புகளைத் தியாகம் செய்வதை கீதை வற்புறுத்துகின்றது. யோகம், வேதாந்தம், பக்தி, கர்மா ஆகியவற்றின் உண்மைப் பொருளினை விளக்கும் கீதையின் கருத்துரைகளைத் தகுந்த ஆசிரியன் கொண்டு அணுகுவதே சாலச் சிறந்தது. ஏனெனின் மனிதனின் பல்வேறு உணர்வு நிலைகளைப்பற்றி அலசுவதால் கீதையின் கருத்துக்கள் சூழ்நிலைக் கேற்றவாறு பொருந்தி அமைகின்றன. ஞானம், பக்தி, கர்மா ஆகியவற்றைத் தொடர்புபடுத்தி எளிதான ஒரு வழியைக் காண்பித்து, அதாவது சிந்தனையையும், செயலையும் ஒரு முகப்படுத்தி, தன்னல மற்ற தியாக உணர்வுடன் கூடிய வழியைக் காண்பித்து, மனிதனுக்கு நம்பிக்கை, மகிழ்ச்சி, உற்சாகம், ஆறுதல் ஆகியவற்றை அள்ளித் தருகிறது கீதை. அழுகப்போகும் உடல், தொடர்ந்த மாற்றங்களைக் கொண்டு விளங்கும் உலகம், அழியா ஆன்மா, ஆகியவற்றின் உண்மைகளை அறிந்து, காமம் கலவா கர்மாவின் பெருமையை உணர்ந்து, எல்லாவற்றிற்கும் மேலாக பக்தியுடன் உள்ளார்ந்த ஆர்வத்துடன் கீதையை அணுகினால், அதன நாயகனிடம நம்மை முழுமையாக ஒப்படைத்துக் கொண்டால், நம் உள்ளமும் உடலும் மேன்மை அடையும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ ।
அஹம் த்வா ஸர்வபா பேப்யோ மோக்ஷ யிஷ்யாமி மாசுச: ॥

# பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

**17-5-78 அன்று திருமலையில் கூடிய குழு கூட்டத்தின்போது தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு:**

திருப்பதியிலுள்ள தி. தி. தேவஸ் தானத்திற்கு உரிமையான கோமளம்மா சத்திரத்தை வாடகையின்றி இலவசமாக, மேலும் ஓராண்டுக்கு (30-5-79 வரை) மாணவர் விடுதியாக பயன்படுத்திக் கொள்ள திருப்பதி கேந்திரிய வித்யா கல்லூரிக்கு குழு அனுமதி அளித்துள்ளது.

தி. தி. தேவஸ்தானத்திற்கு உரிமையான சித்தூர் மாவட்டம் வாயில்பாடு கிராமத்திலுள்ள 21.37 ஏக்கர் பரப்புள்ள புன்சை நிலத்தையும், அனந்தபூர் மாவட்டம் இந்தூபூர் தாலுக்காவிலுள்ள 7.24 ஏக்கர் பரப்புள்ள நன்சை நிலத்தையும், கர்நூல் மாவட்டம் ஆலூர் தாலுக்காவிலுள்ள 19.13 ஏக்கர் பரப்புள்ள புன்சை நிலத்தையும் பொது ஏலத்தில் விற்று விடுவதென்று குழு தீர்மானித்துள்ளது.

திருமலையில் ஸ்ரீ வேங்கடேஸ்வரருக்கு ரூ. 1,000/- செலுத்தி கல்யாணுற்சவம் செய்து வைக்கும் கிருஹஸ்தருக்கு ரூ. 10/- பெறுமான வஸ்த்ர பஹுமானம் கொடுக்கப்படுகிறது. தற்போது கிருஹஸ்தரின் மனைவிக்கும் ரூ. 10/- பெறுமான இரவிக்கைத் துண்டு ஒன்றினையும் வழங்க குழுமுடிவு செய்துள்ளது.

திருமலையில் கல்யாணுற்சவத்தை அடுத்து நடைபெறும் ஆர்ஜித சேவையான வசந்தோற்சவத்தின் கட்டணத்தை 1-6-78 முதல் ரூ. 2000 லிருந்து ரூ. 2500/- ஆக உயர்த்துவதென்று குழு தீர்மானித்துள்ளது.

திருமலையில் டிக்கெட்டு ஒன்று ரூ. 4-என வசூலிக்கப்பட்டு (சேவை ஒன்றிற்கு) யாத்திரிகர்கள் தோமாலா, அர்ச்சனை, அபிஷேகம், பூலங்கி, ஏகாந்தம் ஆகியவற்றிற்குப் பிறகே இறைவனைத் தரிசிக்க அனுமதிக்கப்படுகின்றனர். இதனால் பொது 'க்யூ' வில் யாத்திரிகர்கள் அதிகநேரம் நிற்க வேண்டியதாக உள்ளது. இதனைத் தவிர்க்க, மேற்படி நிகழ்ச்சிகள் நடைபெறும் போதே டிக்கெட் வாங்கிய நபர்களை இறைவனைத் தரிசிக்க அனுமதிப்பது என்று குழு தீர்மானித்துள்ளது.

அண்மையில் திருமலைக்குச் செல்லும் வழியில் நடந்த வழி பறியில் ஈடுபட்ட நான்கு திருடர்களைப் பிடித்துக் கொடுத்தகீழ்வரும்தேவஸ்தானகாவல் துறை ஊழியர்களுக்குத் தலா ரூ. 100/- வழங்குவதென்று குழு தீர்மானித்துள்ளது. 1. ஜமேதார் சி. வீரராகவன், 2. எம். எஸ். ராமசந்திரா நாயுடு, 3. கே. கோவிந்தன் 4. பி. நாகய்யா.

திருமலை கோயில் யாத்திரிகர்களுக்குப் பிரஸாதமாக வழங்கப்படுவதற்காக 100 க்விண்ட்டால் எடையுள்ள டைமண்ட் கற்கண்டினை வாங்க குழு ரூ. 85,000/- ஒதுக்கியுள்ளது.

5-4-78 அன்று திருப்பதி அலிபிரி தோல்கேட் அருகே APC 8272 எண்ணுள்ள தனியார் வாடகை உந்து வண்டி ஒன்றில் மதுபான வகைகளைக் கொண்ட பல பாட்டில்களைக் கைப்பற்ற உதவிய தேவஸ்தான ஊழியர்களான திருவாளர்கள். வை. எல்லப்பசாரி, கே. எஸ். துரைசாமி ஆகியோருக்குப் பரிசாகப் தலா ரூ. 50/- வழங்க குழு தீர்மானித்துள்ளது.

ஆந்திரப்பிரதேசம் வரங்கல் மாவட்டம் கொமரவல்லியில் தி. தி. தேவஸ் தானத்தின் சத்திரம் ஒன்றினைக் கட்டுதற்கு குழு ரூ. 3.60 இலட்சம் வழங்க முடிவு செய்துள்ளது.

கடப்பைமாவட்டம் தாள்ளபாக்கம் கிராமத்தில் ஸ்ரீ அன்னமாச்சார்யா நினைவு அரங்கு ஒன்றினைக் கட்டுதற்குக் குழு ரூ. 1.74 இலட்சம் வழங்க முடிவு செய்துள்ளது.

திருப்பதியில் கட்டப்பட்டு வரும் தி.தி தேவஸ்தானத்தின் புதிய தலைமை அலுவலகக்கட்டடத்தில், எல்லா துறைகளையும் இணைக்கும் வகையில் தொலை பேசி வசதிகளை மேற்கொள்ள குழு ரூ. 1,50,000 ஒதுக்கியுள்ளது.

மேற்கு கோதாவரி மாவட்டத்தில் ஸ்ரீ பானேஸ்வரர் கோயில், ஸ்ரீ ஆஞ்சநேயர் சுவாமி கோயில், கடப்பை மாவட்டத்திலுள்ள ஸ்ரீ சங்கமேஸ்வரர் கோயில், ஸ்ரீ மாதவசுவாமி கோயில் ஆகியவற்றிற்கு, புதுப்பித்தல் பணிகளுக்காக ஒவ்வொரு கோயிலுக்கும் தலா ரூ. 15,000 வழங்க குழு முடிவு செய்துள்ளது.

ஸ்ரீகாகுளம் மாவட்டம் லோலுகு கிராமத்தில் ஹரிஜன வாடாவில் ராம மந்திரம் ஒன்றினைக் கட்டுவதற்கு குழு ரூ. 7,500 வழங்க தீர்மானித்துள்ளது.

★

## சந்தாதாரர்களுக்கு...

31-8-78 ஆம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன: ஆகவே அவ்வெண்கள் உடைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்களைக் குறித்துக் கொண்டு தாங்கள் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தி தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவும். T

27, 46, 108, 162, 165, 167, 290, 563, 568, 813, 832, 835, 838, 840, 845, 849, 853, 1290, 1340, 1347, 1354, 1356, 1358, 1359, 1361, 1362, 1368, 1370, 1373, 1375, 1379, 1381, 2019, 2021, 2022, 2023, 2024, 2025, 2026, 2027, 2030, 2031, 2032, 2033, 2034, 2035, 2036, 2037, 2038, 2039, 2040, 2041, 2043, 2044, 2045, 2046, 2048, 2050, 2051, 2052, 2053, 2054, 2055, 2056, 2057, 2058, 2059, 2060, 2063, 2065, 2068, 2070, 2091, 2097.

# ஸம்ஸ்க்ருத மொழியும் கவி குமாரதாஸரும்

ஸம்ஸ்க்ருதம் பாரத நாட்டின் பழம் பெரும் மொழியாகும். தமிழ் ஒன்றைத் தவிர மற்ற மொழிகள் யாவும் ஸம்ஸ்கிருதத் தாயின் செல்வப் புதல்விகளே என்று துணிந்து கூறலாம். மஹரிஷி யாஸ்கர், பாணிநி ஆகியோர் காலத்தில் ஸம்ஸ்க்ருதம் உலகப் பொது மொழியாக வழங்கி வந்தது என்றும் இம்மொழிக்கு இலக்கணம் வகுத்தவர் பாணிநியே என்றும் மொழி வல்லுநர் கூறுவர்.

முன்னளில் இம்மொழிக்கு 'பாஷை' என்றே பெயர். இலக்கணம் வகுக்கப் பட்டபின் கடினமாய்த் தோன்றிய தாலோ என்னவோ பாமர மக்களிடையே இம்மொழி வழக்கொழிந்து பாலி, ப்ராக்ருதம் போன்ற எளிய மொழிகள் வழங்கி வரலாயின. 'ஸம்ஸ்க்ருதம்' என்ற பெயர் இம்மொழிக்கு அந்நாளிலேயே ஏற்பட்டது.

மஹாகவி காளிதாஸர், குமார தாஸர், பாரவி, மாகர், ஸ்ரீ ஹர்ஷர், பாண பட்டர், தண்டி, பாஸர் போன்ற இலக்கிய கர்த்தாக்கள் தம் இணையற்ற சிருஷ்டிகளால் ஸம்ஸ்க்ருத இலக்கியத்தை வளப்படுத்தி இருக்கிறார்கள்.

இறவாப் புகழ் படைத்த ஸம்ஸ்க்ருத இலக்கிய காத்தாக்களுள் காளிதாஸர் முதலிடம் வகிப்பவர். அவர் நூல்கள் ஒப்பற்றவை. அவர் பிறப்பு, காலம் பற்றி ஆராய்ச்சியாளரிடையே கருத்து வேறுபாடு நிலவுகிறது. விக்ரமாப்தத்தின் துவக்கத்தில் விளங்கினர் என்று சிலரும், குப்தர் காலத்தவர் என்று சிலரும், விக்ரமாப்தத்தின் ஆறும் நூற்றுண்டில் வாழ்ந்தார் என வேறு சிலரும் கூறுகின்றனர்.

இனி 'ஜானகீ ஹரணம்' என்னும் ஒப்பற்ற காவியத்தை இயற்றியவரும் மஹாகவி காளிதாசரின் அன்பருமான கவி குமாரதாஸரின் வரலாற்றைக் கவனிப்போம்.

ஏறக்குறையப் பதின்மூன்றும் நூற்றுண்டின் சிங்கள நூலான பூஜாவளியில் கவி குமாரதாஸர் முத்கலாயன் (மோக்கலான்) என்பவரின் மகன் என்றும் சிங்கள அரசர் என்றும் கூறப் பட்டுள்ளது. இவர் தன் நண்பரான காளிதாஸரின் சிதையில் வீழ்ந்து உயிர் துறந்தார் என்றும் அந்நூல் கூறுகிறது.

வேறு சில வரலாற்றுக் குறிப்புகள் அவர் மௌரிய வமிசத்தவர் என்று மொழிகின்றன.

சரித்திர பூர்வமான ஆதாரங்கள் நம் துர்ப்பாக்கிய வசத்தால் கிடைத்தில. எனினும் கர்ண பரம்பரைக் கதைகள் அவர்தம் பெருமையை வெகுவாகக் கூறுகின்றன. அதில் ஒரு கதை வருமாறு:

''அரசர் குமாரதாஸர் தன் பிரிய நாயகியான கணிகை யொருத்தியின் மாளிகைக்கு அவ்வப்போது செல்வதுண்டு. ஒரு நாள் இன்பக் கேளிக்கையினூடே விளையாட்டாக அம்மாளிகைச் சுவரில் ஒரு சுலோகத்தின் பாதியை எழுதினர்.

'கமலாத் கமலோத்பத்தி: ச்ரூயதே
ந ச த்ருஸ்யதே' |

(கமலத்திலிருந்து கமலம் பிறப்பதைக் கேட்டதுண்டு; ஆனல் கண்டதில்லை.)

காளிதாசரின் புகழைக் கேட்டுக் கேட்டு, அவர் பால் அளப்பரும் அன்பு கொண்டிருந்தவர் கவி குமாரதாஸர். அம்மகாகவியை நேரில் காணும் பாக்கியம் பெற்றிலமே என்று மறுகிக் கொண்டிருந்தவர். சுவரில் எழுதிக் கொண்டிருக்கையில் அவருக்குத் தற்செயலாய் ஓர் எண்ணம் எழுந்தது. அதன் கீழேயே 'இந்த ஸமஸ்யையைப் பூர்த்தி செய்பவருக்கு அவர் வேண்டும் பரிசு அளிக்கப்படும்' என அறிவிப்புச் செய்தார். பிறகு தம் அரண்மனைக்குத் திரும்பினர்.

சின்னுட்கள் சென்றன. அரசராயும் கவிஞராயும் திகழும் குமார தாஸரைச் சந்திக்க விரும்பி அந் நகருக்கு வந்த காளிதாஸர் தற்செயலாய் அதே கணிகையின் மாளிகைக்கு வந்து தங்கினர். சுவரில் ஸமஸ்யையைக் கண்டதும் அக்கணிகையை நோக்கி முறுவலித்தவாறே அதன் கீழே எழுதினர்:

'பாலே, தவ முகாம்போஜே த்ருஷ்டம்
இந்திவரத்வயம் |'

(ஸுந்தரி, உன் முக கமலத்தில் இரு நீலக்கமலங்கள் தெரிகின்றனவே!)

ஸமஸ்யை பூர்த்தியாயிற்று. அதுவும் குமாரதாஸர் விரும்பினற் போல கவி காளிதாஸரே வந்து பூர்த்தி செய்தார். ஆனல் இருவரும் சந்தித்தனரா? இல்லை. அங்குதான் விதி குறுக்கிட்டது. பொருளாசை மிக்க அக் கணிகை தானே பரிசைப் பெறக் கருதினள். காளிதாஸரைக் கொலை செய்வித்து உடலைத் தன் மாளிகைத் தோட்டத்தில் புதைத்து விட்டாள்.

மறுநாள் கணிகை குமார தாஸரை அழைப்பித்தாள். பூர்த்தியான ஸமஸ்யையைக் காட்டிப் பரிசு வேண்டினள். புலமை சிறிதுமற்ற அவளால் இது ஆகாத செயல் என்று துணிந்த அரசர் அவளை அச்சுறுத்தி உண்மையைக் கேட்டறிந்தார். பூமியினின்றும் காளிதாஸரின் உடல் எடுக்கப்பட்டதும் குமாரதாஸரின் துயரம் கரை கடந்தது. உடனே அரச மரியாதைகளுடன் கவிச் சக்ரவர்த்தியின் அந்திமக் கிரியைகளுக்கு ஏற்பாடு செய்தார். தீயின் செந்நாக்குகள் காளிதாஸரின் உடலை அணைத்த அக்கணமே துயரம் மேலிடக் கவி குமாரதாஸர் தாமும் சிதையில் குதித்து எரிந்து மாண்டார்.

10-ம் நூற்றுண்டில் வாழ்ந்த ஜல்ஹணர் (ஸூக்தி முக்தாவளியின் ஆசிரியர்) 13-ம் நூற்றுண்டினரான ராஜசேகரர், 14-ம் நூற்றுண்டினரான சார்ங்கதரர், 15-ம் நூற்றுண்டில் வாழ்ந்த வல்லப தேவர் (ஸுபாஷிதாவளியின் ஆசிரியர்) போன்ற சம்ஸ்க்ருத கவிகள் குமாரதாஸரையும் அவர்தம் காவியமான 'ஜானகீ ஹர

புலவர். எம். ஜனகவல்லி,
சென்னை-44.

தொடர் கவிதை :

# திருவேங்கடவர் பொன்னூசல்

செஞ்சொற்கவி. T. S. ராஜகோபாலன்-சென்னை.

## அடியடைவதற்கான குணங்கள்

அண்டமெலாம் படைக்கவல னயனுந் தானும்
அருந்தவங்கள் மிகப்புரிந்து மறிய லாகா
மண்டுமொளி வானுளும் முதலாய் மன்னு
கற்பகமே! வேங்கடவர்! ஆடி ரூசல்
தொண்டரெலா மனுகியுயத் துலங்கு ஞானம்
வலமிறைமை வீர்யமொடு சக்தி தேசும்
தண்டலற எஞ்ஞான்று மிலங்கு செல்வத்
தனியரசே! திருமார்வர்! ஆடி ரூசல்.

## அடியாரைக் காப்பதற்கான குணங்கள்

வரையறியா வுணர்வுடைய வானோர் தாமும்
வரையறியா மேன்மையொடு வானி னின்றும்
தரையுறைவா வந்துற்றீர்! தணித லாகாத்
தண்ணளியீர்! வேங்கடவர்! ஆடி ரூசல்
கரையறியாப் பெருங்கடலாம் சீல மன்பு
காம்பீர்ய மாதுரிய மினைய காட்டி
உரையறியாக் கருணையுடன் உயிர்க ளுய்க்கும்
உத்தமரே! திருமார்வர்! ஆடி ரூசல்.

## உபய விபூதி நாதன்

மகவிரண்டாய்ப் பெற்றவள்தா யவற்றைத் தன்பால்
இருமருங்கு மணைத்தளித்த லென்னப் பொங்கி
மிகவெழுந்த பிரேமத்தால் தரைவிண் தம்மின்
நடுவமர்ந்து தனித்தாயாய் விளங்கும் மேலீர்!
இகலெழுந்த இருவினையா லேங்கு யிர்கள்
காத்தளிக்கும் வேங்கடவர்! ஆடி ரூசல்
தகவெழுந்து தாமரையில் வந்த செல்வி
தானணையுந் திருமார்வர்! ஆடி ரூசல்.

## திருவாபரணங்கள்

மரைகொண்ட பஞ்சடிமேற் பொன்னின் தண்டை
சில்லொலிப்ப வேங்கடவர்! ஆடி ரூசல்
அரைகொண்ட பொற்சதங்கை சுரிகை நாணும்
எல்லெறிய வேங்கடவர்! ஆடி ரூசல்
நிரைகொண்ட மணியாரம் நிலவும் மார்பில்
நீமமெழ வேங்கடவர்! ஆடி ரூசல்.
விரைகொண்ட துளவத்தின் தாரால் மௌலி
பாசொளிரத் திருமார்வர்! ஆடி ரூசல்.

## திவ்வியாயுதங்கள்

கரம்புனையுங் கங்கணமும் பொன்னு ராழி
கதிர்பொங்க வேங்கடவர்! ஆடி ரூசல்
உரம்புனையுங் கௌத்துவத்தோ டங்க தங்கள்
ஒளிபெய்ய வேங்கடவர்! ஆடி ரூசல்
வரம்புனையும் மணிமகர குண்ட லங்கள்
புடையாட வேங்கடவர்! ஆடி ரூசல்
சிரம்புனையும் மகுடந்தான் திசையு ளெங்கும்
நிலவுதிர்ப்பத் திருமார்வர்! ஆடி ரூசல். (தொடரும்)

ணத்தை'யும் சளைக்காமல் புகழ்கிறார்கள். குமாரதாஸருக்கும் ராவணனுக்கு மாகச் சிலேடைப் பொருளில் அமைந்த பின்வரும் சுலோகத்தைப் பாருங்கள்!

ஜானகீ ஹரணம் கர்த்தும் ரகுவம்சே
ஸ்திதே ஸதி |
கவி: குமாரதாஸச்ச ராவணச்ச
யதி க்ஷம: ||

*[ரகுவம்சம் (ரகுவம்சத்தின் மங்காப்புகழ், காளிதாஸனின் ரகுவம்சம் எனும் காவியம்.) இருக்க 'ஜானகீ ஹரணம்' (ஜானகியை அபகரித்தல், ஜானகீ ஹரணம் எனும் நூல்) செய்யத் துணிவுடையோர் யார்? நிச்சயமாக ராவணனும் கவி குமாரதாஸரும் தான்.]*

காளிதாஸரின் ரகுவம்சம், குமார ஸம்பவம் இவ்விரு காவியங்களையும் அடியொற்றியே குமார தாஸர் தம் காவியத்தை இயற்றினர். எனினும் இவர் காவியம் தன்னளவில் தனிப் பெருமையுடையதாய்த் திகழ்கிறது. இதன் நடை காளிதாஸரின் எளிய அழகிய நடையையும் அதே சமயம் பாரவி, மாகர் ஆகியோரின் அலங்கார யுக்தமான நடையையும் ஒருங்கு கொண்டதாய் உள்ளது. சிலேடை போன்ற சொல்லணிக்கும், உவமை, உருவகம் போன்ற பொருளணிக்கும் 'ஜானகீ ஹரணத்'தில் குறைவில்லை. எனினும் கவியின் உள்ளம் அனுப் பிராசத்தில் போல வேறு எந்த அணியிலும் ஈடுபடவில்லை என்பதும் நமக்குப் புலனாகிறது.

இத்தகைய மகாகவி ஒருவரின் காலம் பற்றி நிச்சயமாகக் கூறமுடியாதது நம் துரதிருஷ்டமே. கர்ண பரம்பரைக் கதைகளின்படி அவர் காளிதாஸரின் சமகாலத்தவர். சரித்திர ஆதாரமின்மையால் இதை ஒப்புக் கொள்வதற்கில்லை. கவி குமாரதாஸர் பாரவிக்குப் பின்பும் மாகருக்கு முன்பும் ஆன இடைக்காலத்தில் வாழ்ந்தவர் என்பது பெரும்பாலோரின் கருத்து. இதற்கு ஆதாரம் கவி குமார தாஸரின் காவிய நடையும் காவியமுமே.

காலம் எதுவாக இருப்பினும் கவி குமாரதாஸர் இணையற்ற மகாகவி. அவரையும் அவர்தம் காவியச் சிறப்பையும் சம்ஸ்க்ருதம் அறிந்த எவரும் மறுக்கவோ மறக்கவோ இயலாது. ★

# எண் கணித சோதிடமும் . . . .

# . . . . அதன் பலா பலன்களும்

(முன் இதழ்த் தொடர்ச்சி)

பகுதி–3

மேலும் சில கூற்றுக்கள் தெளி வுறுத்தும் உலகு சார்ந்த சிந்தனைகளைப் பற்றிய கூறுகளும் மெய்ப்பிக்கின்றன. அவைகள் யாதெனில்,

'Amschaspands of Persian faith"
'Angels of Chaldeans'
'Archangels of revelation etc. etc.

என்பனவைகளாம்

எண்கள் ஏழு, ஒன்பது போன்றவற் றினைப்பற்றி முதன்மைப்படுத்திப் பேசு கையில் விளங்கும் கருக்குவியல்கள் மனித கணக்கீட்டுப்பேறுகளைக் கட்டு விக்கும் கற்களாகும். 'சாசுவத எண்ணை'ப் பிரிக்கும் பேறு ஏழையே சாரும். [உ-ம்]

7 ) 1,000,000 ( 1,42,857
= 27
2 + 7 = 9

பொதுவாக 'ஏழை'க் கருவூலமாகக் கொண்டு வழங்கப்பெறும் கிரகங்கள் சந்திரனும் நெப்டியூனும் ஆகும். சந்தி ரனுக்குகந்த திங்கட்கிழமை (Monday) - 'Moons' day' என்று ஆங்கிலத் திலும் 'Montag' என்று ஜெர்மனிலும் 'Lundi' (Lune) என்று பிரெஞ்சிலும், 'Lunes', என்று ஸ்பேனிஷிலும் வழங் கப்படும் முக்யத்வம் பெற்றதாகும்.

### நாட்களின் எண் குறிப்புக் கேந் திரங்களும் – அதனுல் வழங்கப் படும் கிரகத் தாபனங்களும் :

சூ. 1 –ஞாயிறு (1-4) (சூ+யூரேனஸ்)

சந். 2 –திங்கள் (2-7) (ச+நெப்டியூன்)

வியாழன் (குரு) } 3 -வியாழன் (3)

புதன் 5 -புதன் (5)

வெள்ளி (சுக்ரன்) } 6 -வெள்ளி (6)

சனி - 7 சனி (7)

ஒருமை எண்கள் என்று வழங்கப் படுவனவைகள் ஒன்று முதல் ஒன்பது வரை கணக்கிடு செய்யலாம். எந்தவகையான கூட்டுத் தொகை எண்களோ அதன் ஸ்தானத்தை பொறுத்தோ பாதிக்கப்படாமல் இட மிருந்து வலமாக கூட்டிக் கொண்டே வந்தால் கிடைக்கும் இறுதியான ஒற் றைப்படை எண்ணுக்கு உண்மையில் உயிரூட்டம் ஊட்டப் பெறுகின்றது. அதற்கு (Spirit Number), 'Soul Number', அல்லது 'உயிர் எண்' என்ற பெயர் அளிக்கப்படுகின்றது. (உ-ம்)

ஒருவரது பிறந்த தேதி-மாதம்-வரு டம் (13-8-1945) எனக் கொண்டால், அதன் கூட்டுத் தொகை இடமிருந்து வலமாக முறையே $1+3+8+1+9+4+5 = 31$ $(3+1 = 4)$ எனவே அவ ரது அதிருஷ்ட எண் 4. மேலும் எண் கணித சாஸ்திரத்தில் '0' அல்லது பூஜ்யத்திற்கு மதிப்பு இல்லை. அதைக் கணக்கீடுகளில் கொள்ளாமல் கூட்டுத் தொகையின் பலனைக் கணக்கீடு செய்ய வேண்டும்.

மேலும் ஒருவரின் ஆங்கிலப் பெய ரின் எண்களுக்கு ஏற்ப கூட்டுத் தொகையைக் கணக்கீடு செய்து அதன் Soul Numberஐக் கொண்டும் அவரது அதிருஷ்ட எண்ணைக் கண்டு கொள்ள லாம்.

பொதுவாக பெயர் எண்ணைப்பற்றி யும், பிறந்த எண்ணைப் பற்றியும் ஆராய்ந்து வித்யாசம் கூறத்துணி வோமானல், பிறந்த எண்ணிற்கே சற்று முக்யத்வம் கொடுக்கவேண்டி யுள்ளது.

### பிறந்த எண்ணை முக்யத்வமாய் பேசக் காரணங்கள் :

1. வாழ்க்கை என்னும் இருண்ட அறையின் பூட்டை திறக்கப் பயன்படும் விதிஎண் அதன் தந்த சாவியாக உதவுகிறது.

2. மேலும் நமது பிறப்பின்போது நமது விதியின் கணிப்புப்படி பிறவி ஜாதகத்தின் கிரகங்களின் கவர்ச்சித் தன்மைக்குப் பிறப்பு எண் ஆதாரமாகின்றது.

3. ஒருவகை வாழ்க்கை அதிர்வுக் கோட்பாடுகளின் நூதனுவத் தைப்பற்றிப் பேச ஆதாரமாய் இருக்கின்றது. (Mysterious law of vibration)

4. பிறப்பின் க்ஷண (கண) நேரம் ஒற்றுமை ஸ்வரத்தின் ஸ்தி தியை தீர்மானிக்கிறது. இதுவே தொட்டில் முதல் காடுவரை நமது வாழ்க்கை ஸ்திதியின் படிப்படியான நிலையை நிர்ண யிக்க வழி வகுக்கின்றது.

திரு. E. S. குமரன், B.Sc.
சேலம்.

### பெயர் எண் அவ்வளவு முக்யமானதா ?

ஒருவரது விதியோடு ஒப்பிட்டுப் பேசும் அளவுக்கோ வாழ்வோடு ஒப்

பிட்டுப் பேசும் அளவுக்கோ, பெயர் எண்ணுக்கு அவ்வளவு வாய்ப்பு கொடுக்கப்படவில்லை. காரணம், பிறந்த தேதியை மாற்றுதல் சாத்திய மில்லை. ஆனுல் ஒருவரது பெயரை எளிதில் ஓரளவுக்கு மாற்றிக் கொள்ள லாம். மேல் நாடுகளில் Numeralogyக் காகவே ஒவ்வொருவர் தங்கள் பெயர் களின் தொகுப்பை நீட்டிக்கொள்ள வும், வெட்டிக் கொள்ளவும் செய் கின்றனர். உதாரணமாக Lancuiston என்பதை Lankwiston என்றும் Ferra brata என்பதை Ferrabrauta என்றும் மாற்றிக் கொள்கின்றனர். நம் நாட்டிலும் சில ஹிந்துக்களின் 'பேர் உச்சரிப்புக்கள்' திரிபு பெற்றும் உச்ச ரிப்புக்கள் Mumeralogy அளவில் மாற் றப்பட்டு இருக்கின்றன அல்லவா? Swami என்பது Samy என்றும் Aanand என்பது Anand என்றும் வழங்கப்படு கின்றது அன்றே? ஆகையால் பெயர் எண் யாவுமே அவரவர் சுதந்திரத்திற் கேற்ப மாறுபட்டுத்திருமே அன்றி சாசுவதமாய் நிலைபெற்றது அல்ல.

மேலும் பிறப்பு எண் விஷயார்த்த உண்மைகளைச்சார்ந்ததும், பெயர் எண் மாயமான அல்லது மனோதத்வமான தெய்வ ரீதியான விஷயங்களைப்பற்றி சார்ந்தும் பேசப்பட்டிருக்கின்றன. மேலும் பிறப்பு எண்ணைப்பற்றிப் பேசுகையில், பிறந்த மாதம், வருடம் போன்றவைகள், கணக்கீடுகளுக்கு தனித்த இணைப்புவைத்துப்பேச முடிய வில்லையாயினும் நாள் அல்லது தேதிக்கு விசேஷ முக்யத்வம் உண்டு. மாத எண் பொது விஷயங்களைப்பற்றி ஆராயவும், வருட எண், வரும் நன்மை தீமை நிகழ்ச்சிகளை பரந்து ஆராய உதவும். (உ-ம்)

ஒருவரது பிறந்த ஜாதக அமைப்புக் காலமானது 2-1-1937 என்று கொண் டால்

2 (நாள்)—தனிப்பட்ட (அந்தரங் கம் பற்றி)
1 (மாதம்)—பொது உண்மைகள் பற்றி
1937 (வருடம்)—நிகழும் விதி அமைப்புபற்றிக் கூறும்.

நாள், மாதம்பற்றி அவ்வளவு முக்யத்வம் கொள்ளாது வருட எண் ணைக் கூட்டும்போது $1+9+3+7=20$

1937+
20
———
1957+
22
———
1979+
26
———
2005+
7
———
2012+
5
———
2017+
10
———
2027
———

இவ்வாறு வருடத்தின் தனித்தனி கூட்டுத் தொகையை கூட்டி அவர் ஆயுள் சுமார் 100 எனக்கொண்டால் நிகழும் வருடங்களான 1957, 79, 05 போன்றவைகளில் அவருக்கு குறிப் பிட்ட அல்லது குறிப்பிடப்பட்ட வருடங்களில் முக்யமான மாற்றமோ, நிகழ்ச்சிகளோ உண்டாகும் என்பதில் சந்தேகம் இல்லை. ஆகவே அவரவர் களுடைய பிறந்த தேதி மாதம் வரு டம் போன்றவைகளைப் பொறுத்துத் தான் எண் கணித சோதிட பலாபலன் களும் பொருந்தி பலன் அளிக்கும்.

## பகுதி-4

## எண்களின் பூடக இரகசியமும் அவற்றின் தன்மை விளக்கம் பற்றிய கொள்கைகளும்:

இப்பரந்த பூமண்டலத்தின் சிறந்த சிற்பியானவன் தனது வரையறைக் குட்படாத எல்லையற்ற பேரறிவால் பலவகைப் பொருட்களின்பால் நாட் டம் செலுத்தி ஆராயப் பாமர மனி தர்களின்பால் அநேக வடிவமைப்புக் களைச் செதுக்கி வைத்தான். அதன் விளைவாய்ப் பிறந்த பரந்த சர்வ வியா பாக்யத்தின் மூலம் திறந்த அறிவுக் களஞ்சியத்தின் சாரத்தைப் படைக் கும் வல்லமை அவனுக்கும் வரத்தலைப் பட்டது போலும். தனது உயர்ந்த அறிவுச் சாமர்த்தியத்தின் சாராம் சத்தினுல் அவனும் எண் கணித விந் தையை ஆராயத் தொடங்கினுன். மிகப் பழங்காலத்திலிருந்தே வழங்கி வரும் 'Chaldean and Hebrew' அகர வரிசைச் சரித்திரத்தினைப் புரட்டிப் பார்த்துவிடுவோமாயின் எண்களுக் கென்றே பிறந்த ஆங்கில எழுத்துக் களைப்பற்றியும், அதன் ஒவ்வொன்றின் அமைப்பினைப்பற்றியும், அவற்றின் மதிப்பைப்பற்றியும் அறிந்து தெளிந்து விடலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| A | = | 1 | N | = | 5 |
| B | = | 2 | O | = | 7 |

(33-ம் பக்கம் பார்க்க)

ஸ்ரீகண்டேஸ்வரசுவாமி கோயில், நஞ்சன்கூடு.
திரு. பி. காந்தி–சென்னப்பட்டு.



# ஸ்ரீ அருளாளப் பெருமாள் எம்பெருமானார்

பொன்மயமான பொழுது புலர்ந்தது. என்றைக்குமில்லாத அதிசயமாக ஸ்ரீரங்கத் திருநகரில் அருளொளி வீசிற்று. அன்றைய தினத்தில் புதுப் பொலிவோடு வீதியை எதிர்நோக்கிக் கொண்டிருந்தார் ஒருவர். வென்று வென்று வித்யையில் நாயகனாய்த் திகழ்பவர் அவர். யக்ஞமூர்த்தி என்றத் திருநாமம் கொண்ட அப் பண்டிதரின் முகத்தில் களிப்புக்களை கரைபுரண்டு ஓடிக்கொண்டிருந்தது.

வீதியில் அவர் எதிர்பார்த்த மனிதர் வந்துகொண்டிருந்தார். யாரவர்? வைஷ்ணவ சித்தாந்தத்தின் பெருந் தலைவர் ஸ்ரீராமனுஜர் தான். அவரும் அவரது சிஷ்ய கோடிகளும் வந்து கொண்டிருந்தார்கள். அவருக்காக மிடுக்குடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தப் பண்டிதருக்கு அவரை அருகில் காணக் காண பதட்டம் உண்டாகத் தொடங்கியது. ஏன்?

அவரே அதிசயித்துப் பிரலாபித்தார்.

"என்னிடம் எதற்காகப் பதட்டமும் அச்சமும் உண்டாகின்றன? வருகின்ற ராமனுஜரின் முகம் நேற்று வாடியிருக்க, இன்று மட்டும் ஒளி வீசுகிறதே! நேற்றுவரை வெறும் மனிதஸ்வரூபமாய்த் தெரிந்தவரின் உடலில் இன்று மட்டும் தெய்வ தேஜஸ் எப்படி உண்டாயிற்று? ஐயோ இவரிடம் கர்வம் கொண்டு பதினேழு நாட்களாக வாதித்தது என்ன மடமை? என் மாயா வாதத்தில் ஆணவப்பட்டு ஏசியது எவ்வளவு தவறுகிவிட்டது? இனி நான் அவரோடு வாதம் புரிய மாட்டேன். செருக்குற மாட்டேன். நான் தான் தோற்றவன். அவரது திருவடிகளில் விழுந்து மன்னிப்பு கேட்பது தான் முறை..."

ஸ்ரீ யக்ஞமூர்த்தி என்னும் இப் பண்டிதர் நேற்று வரை மற்றவரையெல்லாம் பதட்டப்பட வைத்தவர். அதோடு அவர் சாதாரணமானவரல்லர்; மாயாவாதத்தில் முற்றும் தெளிந்து தேர்ந்த மாமுனிவர். அவர் சென்றால் அவருக்குப் பின்னால் வண்டி நிரம்பச் சாஸ்திரச் சுவடிகள் போகும். வடநாடு முழுதும் வாதம் புரிந்து பண்டிதர்கள் பலரைத் தோற்கச் செய்து வெற்றிக் கொடி நாட்டி வருபவர் அவர்.

அந்தக் கொடியோடு சில நாட்களுக்கு முன்புதான் தெய்வத் திருநகர் ஸ்ரீரங்கத்திற்கு வந்திருந்தார். அப்படி வருகின்ற வேளையில்தான் ஸ்ரீராமானுஜரைப் பற்றியும், மாயாவாதத்தைக் கண்டித்து வைஷ்ணவச் சித்தாந்தத்தைப் பரப்பி வருவது பற்றியும் கேள்வியுற்றார். அவரைக் குறுகினார்.

"ராமானுஜரே, என்னைப் பற்றி நீங்கள் அறிந்திருப்பீர்கள் என்று நினைக்கிறேன். சாஸ்திராஸ்த வாதங்களில் வல்லவன் நான். உம்முடன் இது விஷயமாய் வாதம் புரிய விரும்புகிறேன். நீர் தயாரா?" என்று வினவினார் ஆணவ மிடுக்குடன்.

ராமானுஜர் அதற்கு நிதானமாகப் பதிலளித்தார்:

"பண்டிதரே, சாஸ்திரங்களுக்குள் வாதத்திற்கு அவசியமில்லை. ஆயினும் உம்மிடம் நான் தோற்றதாகவே வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் பெரும் மகான்."

"அப்படியானால் மயக்கத்தைத் தருகிற உமது வைணவத்தைத் துறந்து எமது நிகரில்லா மாயா வாதத்தை ஏற்பீராக" என்றார் யக்ஞமூர்த்தி.

அப்போதும் நிதானத்தை இழக்காத இராமானுஜர், "பெரியீர், தங்களது மாயா வாதத்தைக் கடைபிடிக்குங்கால் நான் மயக்கம் கொண்டவளுகி விடுகிறேன். அதனால் பேச்சும் வழக்கும் மாயைகளாகி விடுகின்றன. அப்படி இருக்கும்போது தாங்கள் கூறுவது போல் நான் எப்படிச் செய்ய இயலும்?" என்று வினவினார்.

"உலகில் காலம், நேரம், வழக்கு இவையெல்லாம் மாயைதான். இந்த மூன்றையும் நீக்கினால் தான் உண்மையை உணர முடியும் என்கிறது எங்கள் வித்யை. அப்படியிருக்கத் தோற்றுப் போனதாகக் கூறும் நீர் வைஷ்ணவ சித்தாந்தத்திலும் நான் மாயாவாதக் கொள்கையிலும் தங்கியிருப்பது எப்படிப் பொருந்தும்?"

திரு. டி. வி. நரசிம்மன்,
பெரிய காஞ்சிபுரம்.

இந்த ரீதியில் இருவரிடையேயும் பதினேழு நாட்களுக்கு விவாதங்கள் காரசாரமாய் நடைபெற்றன. நாளுக்கு நாள் யக்ஞமூர்த்தியின் விவாதம் பலம் பெற்றுக் கொண்டே போயிற்று.

பதினேழாம் நாள் இரவு. சோர்வோடு தன் மடத்திற்குத் திரும்பினார் ராமானுஜர். தன் இஷ்ட தெய்வமான அருளாளப் பெருமாளான தேவராஜனிடம் இறைஞ்சினார்:

"பரம்பொருளே, இதுவரை உன்னாலும் உனக்காகவும் போற்றி வளர்க்கப்பட்ட சித்தாந்தமெல்லாம் நானே அழிய வேண்டும் என்பது தான் நின் ஆஞ்ஞையா? மாயாவாதிகளின் மோகத்திலும் மயக்கத்திலும் உனது குழந்தைகளைச் சிக்க வைப்பது தான் உன் திருவுள்ளம் என்றால் அப்படியே இருக்கட்டும். நானென்ன செய்ய இயலும்?" என்றுக் கலங்கி உணவை விடுத்து உறங்கினார்.

உறக்கத்தில் உண்டான சொப்பனத்தில் திவ்யரூபமாய் பிரத்யக்ஷமான தேவராஜர், ''ராமானுஜரே, கவலை வேண்டாம். உமது குருநாதரான ஸ்ரீயமுனாசாரியரிடம் மாயாவாதத்தைக் கண்டித்து புத்தி புகட்டும் நூலிருக்கிறது. அதனைக் கொண்டு அப்பண்டிதரை வெல்வீர்'' என அருள் பாலித்தார்.

எம்பெருமானின் திருவுள்ளத்தால் என்றுமில்லா பரவசத்தை அடைந்த ராமானுஜர் மறுநாள் உரிய நூலறிவுடன் யக்ஞமூர்த்தியைச் சந்திக்கப் புறப்பட்டார்.

இந்த நிலையில் தான் அவரைக் கண்டதும் பதைத்துப் போனார் யக்ஞமூர்த்தி. தன் திருதண்டத்தை முறித்தெறிந்துவிட்டு ராமானுஜரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் தன்னைப் பொறுத்தருளும்படி வேண்டிக் கொண்டார்.

ராமானுஜருக்கு ஒன்றும் விளங்கவில்லை.

''பண்டிதரே இதென்ன, வாதமிட வேண்டிய தாங்கள் வணங்குவதென்ன?'' என்று வினவினார்.

''பேரருளாளரே, நேற்றுவரை என்னோடிருந்த ஆணவம் இன்றழிந்தது. உம்மிடம் கேட்டறிய வேண்டிய நான் ஆணவத்தில் உம்மிடமே விவாதிக்க வந்துவிட்டேன். இக்கீழ்மகனை மன்னித்து நல்லருள் செய்தல் வேண்டும்'' என்று நா தழுதழுக்கச் சொன்னார் யக்ஞமூர்த்தி.

இதனைக் கேட்டு நிதானத்துடன் கூறினார் ராமானுஜர்:

''பண்டிதரே, உமது ஆணவத்திலொன்றும் தவறில்லை. ஏனென்றால் உலகத்தில் கல்விச் செருக்கைப் போன்றது வேறெதுவுமில்லை. மற்ற திறமைகளின் பேரில் செருக்கு ஏற்பட்டாலும் அவற்றை எளிதில் விலக்கி விடலாம். ஆனால் வித்யை அப்படி இல்லை. அதனாலேயே நீங்கள் விவாதம் செய்தீர்கள். இப்போது உண்மையை உணர்ந்தீர்களென்றால் அதற்குக் காரணம் பரமன் தான். யாருக்கும் கிட்டாத வகையில் அந்த அருளாளப் பெருமாளின் அருளுக்கு ஆளானீர்கள். எம்பெருமானே, உமக்கு அவ்விறைவனது பெயரே அமையட்டும். இன்று முதல் 'அருளாளப் பெருமாள் எம்பெருமான்' என்றுத் தங்கள் திருநாமம் விளங்கட்டும்.''

பரவசமடைந்த யக்ஞமூர்த்தி தன்னைச் சிஷ்யனாக ஏற்று வைணவச் சித்தாந்தங்களைக் கற்றருள வேண்டுமென்று வேண்டிக் கொண்டதும் வினயமாய் பதிலுரைத்தார் ராமானுஜர்:

''பண்டிதரே, நீர் அதைப் பயில வேண்டுமானால் சாஸ்திரப்படி பூணூல் தரித்து, திருமண் காப்பணிந்து, சங்கு சக்கரச் சின்னங்களை அணிந்து கொள்ளல் வேண்டும்.''

அவ்வாறே செய்த யக்ஞமூர்த்தி இராமானுஜரின் திருவருளைப் பரந்து பாடினார்:

'பேதையர் வேதப்பொருள் இது
வென்று உன்னி பிரமம் நன்றென்று
ஓதி, மற்றெல்லா உயிரும் அஃதென்று
உயிர்கள் மெய்விட்டு
ஆதிபரமனோடு ஒன்றும் என்றுசொல்
லும் அவ் அல்லலெல்லாம்
வாதில்வென்றான் என்இராமானுஜன்
மெய்ம்மதிக் கடலே'

மிகச் சிறந்த அருளைப் பெற்ற ஸ்ரீ யக்ஞமூர்த்தி பின்னர் ராமானுஜரின் விருப்பப்படியே தன் மன இருளைப் போக்க 'ஞான சாரம்' பிரமேய சாரம்' என்னும் இரண்டு அரிய கிரந்தங்களைத் தமிழில் பாடியருளினார்.

இந்த பாக்கியம் மட்டுமின்றி அவரது வாழ்க்கையில் வேறொரு அருளும் கிட்டியது.

ஒரு முறை கல்வியில் தேர்ச்சி பெற்ற மூன்று பண்டிதர்கள் ராமானுஜரிடம் ஆசிபெற வந்தபோது அவர் அவர்களை யக்ஞமூர்த்தியிடம் செல்லும் படிக்கூற அவர்களும் அவ்வாறே வந்து ஆசி பெற்றார்கள். ஆயினும் அவர்களை தம் சீடர்களாக ஆக்கிக் கொள்ள யக்ஞமூர்த்திக்குப் பெரும் தயக்கமாய் இருந்தது.

எனவே ராமானுஜரிடம் சென்று ''மகாநுபாவரே, இதென்ன புதிய கஷ்டம்? இவர்களைச் சீடர்களாகக் கொண்டால் 'நானொரு குரு' என்ற ஆணவம் எனக்கு வந்து விடுமோ என்று அஞ்சுகிறேன். என்னைத் தங்கள் சீடராக வைத்துக் கொள்ள வேண்டுமேயன்றி ஆசாரியனாக ஆக்கி விடலாகாது'' என்று கேட்டுக் கொண்டார்.

யக்ஞமூர்த்தியின் சொற்களால் பரவசமடைந்த ராமானுஜர் "சுவாமி, தங்களைச் சோதிக்கவே இப்படியொரு காரியத்தைச் செய்தேன். இதில் நீர் வென்று விட்டீர். இவர்களுக்கு நீங்கள் தான் ஆசாரியனாய் இருந்து வரல் வேண்டும்'' என்று ஆசி கூறி அருளினார்.

அவர் கூறியபடியே அவர்களுக்கும் அவரைப்போன்றவர்களுக்கும் ஆசாரியனாய் இருந்து வரலானார் யக்ஞமூர்த்தி. அப்படியாக வந்தப் பரம்பரை தான் 'விஞ்சிமூர் பரம்பரை' என்று வழங்கலாயிற்று.

நெல்லூர் ஜில்லாவில் உள்ள விஞ்சிமூரில் யக்ஞமூர்த்தி பிறந்தாராதலால் அவரை ஆசாரியனாய்ப் பெற்றவர்களின் பரம்பரைக்கு அவ்வூர் அடிப்படையாயிற்று. அப்பரம்பரையினர் ஆண்டுதோறும் அவனுதின் பிறந்த திருநாளைச் சீரும் சிறப்புமாய்க் கொண்டாடி வருகிறார்கள்.

ஆசாரியப் பெருமக்களில் முதன் முதலாக வெண்பாக்களைப் பாடியவர் இவர்.

அவரது திருவிக்ரகத்தினைச் செங்கற்பட்டு மாவட்டத்தில் அடங்கிய காஞ்சி மாநகரில் அமைந்துள்ள ஸ்ரீ பாண்டவதூதப் பெருமாள் ஆலயத்தில் வைத்து துதித்து வருகிறார்கள். விஞ்சிமூர் பரம்பரையைச் சேர்ந்த பக்தகோடிகள் ஒவ்வொரு கார்த்திகை மாதத்திலும் பரணி திருநட்சத்திரத்தில் இச்சிரேஷ்டரின் சாற்றுமுறை விழாவினைக் கொண்டாடிச் சிறப்பிக்கிறார்கள்.

ஸ்ரீ அருளாளப் பெருமாள் எம்பெருமானார் திருவடிகளே சரணம்!



## வாரீரோ !

திரு. ஆர். ஸ்ரீரங்க நாச்சியார், திருப்பதி.

**பல்லவி**

கண்டு வணங்க வாரீர் ஸ்ரீகோவிந்த ராஜனை
கண்டு வணங்க வாரீர் ஸ்ரீகோவிந்த ராஜனை (ப)

**அநுபல்லவி**

கண்டவுடன் கவர்ந்திடும் கண்ணழகு கொண்ட
அண்டர்கோன் அமர்ந்திடும் அணி அரங்கத்திற்போலே (ப)

**சரணங்கள்**

மண்டலத்திலோரதிசயம் மானிடரே பாரீர்
மிண்டராய் உண்டுகொண்டு மீண்டும் ஸம்ஸாரியாவீர்
விண்டு சொல்கின்றேன் உமக்கு திருமலை அப்பனே
ஈண்டென வந்துகீழே பள்ளியும் கொண்டுள்ளான் (ப)

வெண்ணெயுண்ட கிருஷ்ணன் இவனேதான் காணீர்
மண்ணையுண்டு பின்னும் இல்லை எனச் சொல்லி
அண்டங்கள் அனந்தமும் என்வாயில் காணென
விண்டுகாட்டி அன்றன்னையை மகிழ்வித்தான் இவனே (ப)

குன்றமெடுத்தானுமவன் குன்றிலே நிற்பவன்
அன்றந்த ச்ரமம் தீர இன்றிங்கே பள்ளிகொண்டான்
மண்ணை யுண்பான் ஒரு நாள் அது ஸம்ஹாரத்திலே
வெண்ணை யுண்பான் அதற்காக அது அவதாரத்திலே (ப)

கோவிந்தா கோவிந்தா கோவிந்தா என்று சொல்லி
கோவிந்த ராஜனை வணங்கிச் சென்றிடவே
கோவிந்த நாம மகிமையினாலே இன்னம்
கோவிந்த ராஜனிடம் பக்திகொண்டு உய்ந்திடுவீர். (ப)

# திருவேங்கடவனின் திருவருள் தேவி



திரு. எஸ். வி. ராமசுவாமி,
செகந்திராபாத்

"எம்பெருமான் தானே தன் ஸத்ய ஸங்கல்பத்தால் இப்பிரபஞ்சமாக மலர்கின்றான்" என்பது உபநிடதங்களின் துணிபு. எனவே இப்பிரபஞ்சங்கள் யாவும், சராசரங்கள் அடங்க அவைகளின் ஸ்வரூப, ஸ்த்திதிப்ரவ்ருத்திகள் (தோற்றம், இயக்கம், செயலாற்றல்) யாவும் அவன் இட்ட வழக்கு. இதை உணர்வது அவ்வளவு எளிதா! இதை மறந்து எல்லா சித்வஸ்துக்களும், கல்வியறிவும், பகுத்தறிவும், ஞானமும் படைத்த மானிடர் உட்பட, தம் தம் ஸ்வஸ்வாதந்தர்யத்தைப் பறைசாற்றியே செயல்படுகின்றன. வாயினால் மட்டும் "அவனின்றி ஓரணுவும் அசையாது" (தேனவிநா த்ருணமபி ந சரித) என்று பேசுகிறான்.

இதனைவிட வேறு என்ன பாபம் வேண்டும்.

இதனைச் செய்யாதவன்தான் உண்டா?

இப்படி அவனுடைய பொருளாகிய இவ்வாத்மாவை திருடி 'என்னுடையது' 'நான்' என்று வாதாடவும் முந்தும் நம்மைக் கண்டு அவனுக்குக் கோபம் வருவது இயற்கையன்றோ. கோபித்துப் பலனில்லை. சேதனர்கள் பால் ஒரு தகப்பனைப்போல் கருணையினால்

"சீ, அசடே, இனி இப்படிச் செய்யாதே" என்று பேசி பலவாறு தானே பிறந்து 'கீதை' போன்ற உபதேசங்களையும் செய்தான். சேதனன் திருந்த வழியுண்டு என்று ஒரு கையால் தன் திருவடிகளைக் காட்டுகின்றான். தன்னிடம் கருணையுண்டு என்று காட்டவே, ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி என்ற திருத்தாயார்களோடு ஸேவை ஸாதிக்கின்றான். இவர்களெல்லாம் அவன் கருணை நிழல்கள்.

சேதனனுடைய போக்கற்ற நிலையைக் காணும்போது அவன் திருவுள்ளத்து இயல்பான கருணையே அழுத்தமான "தயை" என்றும் ஓர் புத்துணர்ச்சியைத் தோற்றுவிக்கின்றது.

இவளே 'தயாதேவி'. இவளுடைய ப்ரதிபிம்பங்களே ஸ்ரீதேவி, பூதேவித் தாய்மார்கள் என்கின்றான் கவி ஸார்வபௌமன்.

"பரஹித மநுகம்பே பாவயந்த்யாம் பவத்யாம்
ஸ்திரமநுபதி ஹார்தம் ஸ்ரீனிவாஸோ ததாநஃ
லலிதருசிஷு லக்ஷ்மீ பூமிநிளாஸு நூநம்
ப்ரதயதி பஹுமாநம் த்வத் ப்ரதிச் சந்த புத்யா ||"

திவ்ய தேச வாஸம் சிறந்தது. ஏன்? அது நமக்கு அடிக்கடி இறைவன் நினைவை உண்டுபண்ணும். ஆனால் எல்லா திவ்ய தேச வாஸம் வாழ்க்கையில் கிட்டிவிடுமா? எனவே எங்கு வசித்தாலும் வாழ்க்கையில் பலமுறை திவ்ய தேச யாத்திரை கிட்டலாம். அநேகமாக ஒவ்வொரு இந்தியனுடைய வாழ்க்கையிலும் ஒரு முறையாவது திருப்பதி யாத்திரை கிட்டியே இருக்கும். அப்படி வருபவர் ஐயனிடம் மோக்ஷத்தை யாசிக்கின்றனர்? இல்லவே இல்லை. ஆனால் அவன் விரும்பும் எந்த ஐஹிக ப்ரார்த்தனைகளையும் ஈந்து அவன் உள்ளத்தில் திருவேங்கடம் குடிபுகுந்து விடுகின்றது. இறைவனைப் பொருட்படுத்தாத நாஸ்திகன் உள்ளத்தில் கூட திருமலையின் இயற்கையழகுகளும், கானாறுகளும், நீர்வீழ்ச்சிகளும் திருமலைச்சார்புகளின் கம்பீரத் தோற்றங்களும் அவன் நினைவில் நிலைத்துவிடுகின்றன. ஒன்றுமறியாதவன் கூட திருமலையில் கிடைக்கும் லட்டு, வடை போன்ற மஹாப் பிரஸாதங்களையுமாவது நினைவு கொள்கின்றானல்லவா?

இப்படி ஐஹிக லாப நினைவுகளையே மோக்ஷ ஸாதன நினைவுகளாக்கி விடுகின்றாள் தயா தேவி.

எப்படி?

சில ஐதிஹ சுகங்களையடைந்த ஒரு ஸாமான்யன்கூட நான் [illegible] வாயில் ''ஸ்ரீநி[illegible] [illegible] என் நினைக்கு உதவக்கூடாதா?'' என நினைக்கின்றான். அவன் உள்ளத் திரையில் தான் செய்த திருமலை யாத்திரை பளிச்சிடுகின்றது

அவன் உள்ளத்தில் (முன்பெல்லாம் பெற்ற திருவேங்கடவன் திருவருள் தேவியின் தூண்டுதலால்) ஒரு சாந்தி கிட்டுகின்றது. ஒரு கணம் ''எது நடப்பினும் ஸ்ரீனிவாஸனே கதி'' என்ற துணிவு தோன்றுகின்றது. மறு கணம் உயிர் பிரிகின்றது. அவ்வளவுதான்.

அப்பொழுதே திருமலையில் தயா தேவி இறைவனுள்ளத்தே அவன் முன்பு கூறிய மொழிகளையே நினைவூட்டி இச்சாமானியனுக்கும் பரம பதத்தை அருள் செய்யவைக்கின்றாள்.

இறைவனுக்கு திருவருள் தேவி நினைவூட்டிய அவன் மொழிகள்தான் என்ன ?

முன்பு அவன் செய்த முடிவே. ''அந்தி காலத்தில் எவன் என்னையே நினைந்து உடலை விடுகின்றானோ அவன் என் நிலையையடைகின்றான். இதில் ஐயமில்லை.''

''அந்தி காலேச மாமேவ ஸ்மரன்
முக்திவா களேபரம்
யः ப்ராதி ஸமத்பாவம் யாதி
நாஸ்த்ர ஸம்சய ః ||''
(கீதை 8.5)

இனி இவ்வளவு நினைவுகளையும் நமக்கு ஊட்டும் ஸ்லோகத்தைக் காண்போம்.

''வ்ருஷகிரி ஸவிதேஷு வ்யாஜதோ
வாஸபாஜாம்
துரித கலுஷிதானாம் தூயமானா
தயே த்வம்
கரணவிலய காலே காந்தி சிக
ஸ்ம்ருதீனாம்
ஸ்மரயதி பஹுலீலம் மாதவம்
ஸாவதானா'' (37)



## நின்னைச் சரணடைந்தேன்

திரு. எஸ். கஸ்தூரி ரங்கன், சிவகங்கை.

அன்றொரு நாள் கனவில் நின் அருள் முகம் கண்டேன்
அடடா! உன் அருட்சோதி ஆறுக உண்டேன்
இன்று எனது வினைப்பயன் யாவும் ஒழித்தேன்
நன்று உன் நீள்வாயில் நானும் படியாவேனோ!

வென்றியை நான் விரும்பவில்லை வேதத்தின் உட்பொருளே!
நன்றியை நான் மறக்கவில்லை நானிலத்தின் நாயகனே
ஒன்றிலும் பற்றில்லாத உள்ளத்தை எனக்கருள்வாய்
என்றேனும் பலகோடியில் ஒரு திருமலைக்கல் அவனோ!

காலத்தை வெல்லும் காட்டாற்று வெள்ளத்தில்
காலத்தைக் கொள்ளும் கசடுள்ள வாழ்க்கையை
தாளத்தில் நடைபோடும் திருமலைத் தண்ணீரில் ஓர் துளியாய்
கோளத்தில் உருமாறி குதித்தோடும் நாள் வாராதோ!

எண்ணற்ற மலைச்செடியில் ஏதேனும் ஒன்றாய்
கண்ணற்ற குருடராய்க் காலத்தை கழிக்காமல்
வண்ணமலை கைபரப்பி வானத்தின் முகடு முட்ட
எண்ணச் சுழலில் எப்போது ஆவேனோ!

வேங்கடத்தின் உள்ளதெல்லாம் வேதத்தின் எல்லை
வேங்கடத்தை நினைத்து விட்டால் விட்டது தொல்லை
வேங்கடத்தில் விளையாடும் வேதாந்தக் கூத்தினை
வேங்கடத்தின் மொழிகொண்டு வினைப்பயனைப்பெறுவோமே.

இவ்வுலகில் நல்வாழ்வு வாழ எல்லா முயற்சியும் செய்தல் மனித இயல்பே. அத்தகைய வாழ்வையளிக்க வேதங்கள் மறந்து விடவில்லை. ''பொருள் வேண்டுமா?'' ''நோயற்ற வாழ்வா?'' ''பகைவர்களை ஜெயிக்கவா?'' ஆம்! இதுபோன்றவைகளுக்குத் தேவையான யாகங்கள், யஜ்ஞங்கள், மந்திரங்கள், கல்ப ஸூத்திரங்கள் ஆகிய வற்றைப்பற்றி எத்தனையோ மறைகள் பேசுகின்றன.

வேதங்கள் கடல் போன்றவை. தெளிந்த நீர்க்கடல். எனினும் அதன் நீர் எல்லாம் மனிதனுக்குத் தேவைப் படுவதில்லை. அவனவன் தன் தேவைக் கேற்ப அந்நீரைப்பயன்படுத்திக்கொள் பவன் அறிஞன். இப்படி பகவத்கீதை ''யாவனர்த்த உதபானே'' என்ற ஸ்லோகம் பேசுகின்றது.

வேதங்களாகிய பெரிய கடைத் தெருவின் நடுவே புகுந்து (निगम विपणी मध्ये) ஒருவன் தேவைகளை வாங்கு கின்ருன். ஆனல் அவனுக்கு அத்யா வசியமான கிடைத்தற்கறிய பொருள் அக்கடை வீதியில் உள்ளது. ''அதன் உயர்ந்த பயனும் அது அக்கடை வீதி யில் விற்குமிடமும் அவர்கள் அறிய வில்லையோ என்னவோ பாவம்'' என்று அவர்களிடம் அன்பு கொண்டு விலையுயர்ந்ததும், என்றும் அனுப வித்து மகிழக்கூடியதுமான அச்சிறந்த ஆபரணத்தை (முத்துக்களால் சுற்று மிழைக்கப்பட்டு இடை ஒளி விசும் நீலமணியை 'नीप्य मुक्तानुषक्तं हनोलंमे' என்று மோக்ஷத்தில் நித்யஸூரிகள் சூழவீற்றிருக்கும் எம்பெருமானை என்று வரும் கவிதையழகு நோக்கத் தக்கது) அவர்களுக்குக்காட்டி அதைப் பெறும்படி தூண்டுகின்ருய்.

தனம், ஆரோக்யம், சுகம் போன்ற இவ்வுலகத் தேவைகளை திருமலை சென்று வேண்டி வேண்டிப்பெறும் ஒரு வனுக்கு, அதே திருமலை ஸ்ரீநிவாசன் தான் மோக்ஷத்தைக் கொடுத்து என் றும் தன்னேடு நின்று ஆனந்தத்தை யளிக்கும் பரம்பொருள் என்று அவன் பால் பிறந்த திருவருள் தேவி அவ னுக்குக் காட்டிவிடுகிருள்.

உபமான அழகும் எம்பெருமான் அழகும் அருளும் அவ் எம்பிரான் உள் ளத்தெழும் தயை செய்யும் பணியால் நாம் உய்வதும் இச்சுலோகத்தில் நன்கு தெரிகின்து.

''பரிமித பலஸங்காத் ப்ராணினः கிம் பசாநாः
நிகம விபணி மத்யே நிதய முக்தா நுஷக்தம்

ஸ்ரீ தியாகராஜ சுவாமி கோயிலிலுள்ள பஞ்சமுக வாத்தியம்-திருவாரூர்,
திரு. கே. சீதாராம்-கோயம்புத்தூர்.



ப்ரஸதந மநுகம்பே ப்ரப்தவத்யா பவத்யா
வ்ருஷகிரி ஹரிநீலம் வ்யஞ்ஜிதம் நிர்விசந்தி''

திருவேங்கடவனின் அபாரமான கருணை கிடைத்தற்கு அரிதன்று. மிக எளிது. அஞ்சலபத்தனுய் அவன் திரு முன் நின்று மெய் சிலிர்க்கக் கண்ணீர் மல்க, தழுதழுத்தக் குரலிலா வது நமது பாபங்களைச் சொல்லி வேண்டினல் போதும் அவன் கருணை மழை பொழிவார்.

இப்படி எளிதில் உருவாகும் அவன் திருவருள் தேவியைப் புரிந்து கொள் ளாமலோ, தெரியாமலோ ஒருவன் தன் இகபரத் தேவைகளுக்கு பிராயச் சித்த, யாக, யஜ்ஞாதி மார்க்கங் களையோ, மிகவும் சிரமமான இதர தேவதா உபாஸனங்களையோ மேற் கொள்வானுயின் அவனைப்போல் ஒரு பித்தன் உண்டா ?

தெளிந்த, முத்துப்போன்ற குளிர்ந்த நீரோடை தன் பக்கத்தில் ஓடிக் கொண்டிருப்பது கண்டும் நீர் வேட்கை கொண்ட ஒருவன் பகட்டாகத் தன் னெதிரில் காணும் கானல் ஒட்டத்தை நீரோட்டமெனமலைந்து அதன் பின் ஓடி ஏமாறலாமோ ?

திருவேங்கடவன் திருவருள் தேவியை வணங்கி பஹுமானம் செய்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ளாமல் பல இதர வழிகளில் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முயற்சிக்கும் ஒருவனை இப்படி உவமித் துப் பேசுகின்றது இந்தச் சுலோகம்:

''த்வயி பஹுமதி ஹீநः ஸ்ரீனிவாஸா நுகம்பே !
ஜகதி கதிமிஹாந்யாம், தேவி ஸம்மந்யதே யः
ஸகலு விபுத ஸிந்தௌ ஸந்நிகர் ஷே வஹந்த்யாம்
சமயதி ம்ருகத்ருஷ்ணு வீசிகாபிः பிபாஸாம்,

(தொடரும்)

# ஆனிவார ஆஸ்தானம்

இம்மாதம் 16-ம் தேதி திருமலையில் வழக்கம்போல் ஆனிவார ஆஸ்தானம் வெகு விமரிசையாகக் கொண்டாடப் படும். யுகாதி, தீபாவளி ஆஸ்தானங் களைப் போன்று இவ்ஆனிவார ஆஸ் தானமும் வருடத்தில் ஒரு முக்கிய மான நிகழ்ச்சியாகக் கருதப்படுகிறது. இதுபோது திருமலையில் ஸ்ரீ வேங்க டேஸ்வரர் அரிய ஆபரணங்களான லக்ஷ்மீஹாரம், மகரகண்டி, கிரீடம் மற்றும் ஹஸ்தம் ஆகியவற்றால் அலங் கரிக்கப்படுவார். உற்சவமூர்த்தியான ஸ்ரீமலையப்ப சுவாமி, அரிய ஆபரணங் களால் அலங்கரிக்கப்பட்ட தன் தேவி யர் இருவருடன் முக மண்டபத்திற்கு அருகே அமைக்கப்பட்டிருக்கும் தர் பாரை அலங்கரிப்பார்.

இவ்ஆனிவரா ஆஸ்தானம், அவ் வாண்டுக்குரிய கணக்கு வழக்குகள் முடியப் பெற்று, அடுத்த ஆண்டுக் குரிய புதிய கணக்குகளைத் தொடங்கப் பெறுவதைக் குறிக்கும். எப்பொழு தும் தமிழ் ஆனி மாதத்தின் கடைசி நாளன்றே இவ்விழா நடைபெறும். அன்று காலை திருவாராதனம் (தோமாலா) அர்ச்சனை மற்றும் நைவேத்தியம் ஆகியவற்றிற்குப் பிறகு உற்சவமூர்த்தி தன் தேவியர் இரு வருடன் தங்க வாயிலருகே (பங்காரு வாகிலி) எழுந்தருளிய பின், அவர் வஜ்ரகவசம் மற்றும் பல ஆபரணங் களால் அலங்கரிக்கப்படுவார். ஸ்ரீ சேனாதிபதியாரும் மண்டபத்திற்கு கொண்டு வரப்பட்டு, ஸ்ரீ மலைப்ப சுவாமிக்கு இடது பக்கத்தில் தனியாக அமர்த்தப்படுவார். பிறகு உற்சவ மூர்த்தி சர்வ பூபால வாகனத்தில் எழுந்தருளி, பங்காரு வாகிலி அருகே உள்ள திருமாமணி மண்டபத்தில் தர் பார் நடத்துவார். எல்லா அலங் காரங்களுக்குப் பின்னர், ஜியர்கள், ஆசார்ய புருஷர்கள் மற்றும் கோயில் அலுவலர்கள் ஆகியோர் ஒரு வெள்ளித் தட்டில் 6 புதிய வஸ்தரங் களுடன் பிரமிளா அறையிலிருந்து திருவீதி வலம் ஒன்றினை மேற்கொள் வர். இவ்வூர்வலம் எல்லா கோயில் பரிவாரங்களுடன் துவஜஸ்தம்பத் தையும் (கொடி மரம்) விமான பிர தக்ஷணத்தையும் சுற்றி வந்தபிறகு கோயில் கருப்ப கிருஹத்தை அடை யும்.

பின்னர் சாதாரணமாக நடை பெறும் ஹாரத்திக்குப் பிறகு, வெள்ளித் தட்டில் கொணரப்பட்ட 6 ஆடைகளில் நான்கு ஆடைகள் மூல வருக்குப் போர்த்தப்படும். பிறகு அவ் வூர்வலம் உற்சவமூர்த்தியான ஸ்ரீமலை யப்ப சுவாமி இருக்கும் முக மண்டபத் திற்கு வரும். மீதம் இருக்கும் இரண்டு ஆடைகளில் ஒன்று ஸ்ரீ மலையப்ப சுவாமிக்கும், மற்றொன்று ஸ்ரீ சேனாதி பதியாருக்கும் போர்த்தப்படும். ஸ்ரீ சேனாதிபதியாரும், அர்ச்சகரும் பவி த்ரம் அணிந்த பிறகு, ஆஸ்தானம் ஆரம்பமாகும். அதற்கு முன்பு திரு மலை கோயிலின் அலுவலர்கள் தங்களு டையத் துறைகளின் அலுவலக முத் திரைகளைத் திருப்பிக் கொடுப்பர். அவை உற்சவமூர்த்தியான ஸ்ரீ மலை யப்ப சுவாமியின் திருவடிகளில் வைக்கப்படும். பின்னர் மந்திரங்கள் ஓதப்பட, உற்சவமூர்த்தி அட்சதை யால் அர்ச்சிக்கப்படுவார். பரிவட் டங்களுக்குப் பிறகு கோயிலின் எல்லா சாவிகளும், ஜியர்களின் முத்திரை களும் ஜீயங்கார்களிடம் ஒப்படைக் கப்படும். பிறகு தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழு சார்பில் அதன் உறுப்பினர் ஒருவருக்கும், தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலை வருக்கும் பரிவட்ட கௌரவம் வழங் கிய பிறகு, அவர்களிடம் மேற்படி சாவிகள் மீண்டும் கொடுக்கப்பட்டு, கோயில் பொறுப்புகள் ஒப்படைக்கப் படும். இந்நிகழ்ச்சி கோயில் நிர்வாகம் சம்பந்தப்பட்ட பணிகளை ஏற்கும் நபர்கள் செய்யும் பதவி பிரமாணமாக கருதப்படும். பின்னர் ஜீயங்கார்களின் பிரதி நிதியாக விளங்கும் ஒருவர் (ஏகாங்கி) ஒரு வெள்ளிக் கிண்ணத்தில், சுற்றியிருக்கும் கூட்டத்திலிருந்து இறைவனுக்கான காணிக்கைகளை வசூல் பண்ணுவார். இறுதியில் பரகா மணியைத் (காணிக்கைகளை வேறு படுத்துவது) தொடர்ந்து புதிய ஆண் டின் தொடக்கத்தைக் குறிக்கும் விதத் தில் புதிய கணக்கு விவரங்கள் ஒரு புதிய ஏட்டில் பதிவு செய்யப்படும். இதனைக்கல்வெட்டுக்கள் "திருவாண்டு எழுத்திடல்" என்று கூறுகின்றன. பிறகு பிரஸாதங்கள் மற்றும் அட் சதை பக்தர்களுக்கு விநியோகிக்கப் படுவதைத் தொடர்ந்து ஆஸ்தானம் முடிவுறும்.

அன்று மாலை திருப்பதியிலுள்ள ஸ்ரீகோவிந்த ராஜ சுவாமி கோயிலி லும் இது போன்ற ஒரு நிகழ்ச்சி நடை பெறும்.

பன்னெடுங் காலமாக நடந்து வரும் இவ்விழா முன்பு "ஆதி அயனம் ஆஸ் தானம்" என்று அழைக்கப்பட்டு வந்ததாகத் தெரிகின்றது. இவ்விழா வைப்பற்றிய சில குறிப்புக்கள் திரு மலை கோயிலின் இரண்டாவது பிரா காரத்திலுள்ளகல்வெட்டுக்களிலிருந்து (No. 115, T.T. 617) தெரியவருகின்றது.

1494-ஆம் ஆண்டைச் சார்ந்த இக் கல்வெட்டுக்கள். மருநாயனர் பெரு மக்கள், கோவிந்தன் ஆகிய இரு கோயில் கணக்கர்கள் மேற்படி விழா வுக்கு 401 பணம் கொடுத்ததாகக் கூறுகின்றன.

கோயிலில் சமய வழி முறைகள் ஒழுங்காக நடைபெற வேண்டியதன் அவசியத்தையும், கோயிலில் பணி புரி பவர்கள் நோமையாக, இறை உணர் வோடு பணியாற்ற வேண்டும் என் பதையும் இவ்விழா எடுத்துக் காட்டு கின்றது.

★

# திருமலையிலும் திருப்பதியிலும் உணவு வசதிகள்

நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து யாத்திரை மேற்கொள்ளும் யாத்திரிகர்களின் அடிப்படை பிரச்னைகள், அவர்கள் போகும் இடங்களில் அமையும் தங்குவதற்கான இருப்பிடமும், உண்ணும் உணவும்தான். இதை மனதிற்கொண்டுதான் தி.தி. தேவஸ்தானம் திருமலையிலும் திருப்பதியிலும் யாத்திரிகர்கள் தங்குவதற்காக இலவச சத்திரங்கள் பலவற்றையும், வசதியான காட்டேஜுகள் பலவற்றையும் கட்டியுள்ளது. இவை எவ்வகையில் உதவியாக அமைந்துள்ளன என்பது திருமலைக்கு வருகை புரியும் ஒவ்வொரு யாத்திரிகருக்கும் நன்கு தெரியும். அடுத்து எழுவது உணவுப் பிரச்னை. திருமலையில் தனியார் உணவு விடுதிகள் பல இருந்தாலும், சுகாதாரமான முறையில் செய்யப்பட்டு, நியாயமான விலையில் வழங்கப்படும் உணவு வகைகள் தேவஸ்தானத்தாரின் உணவு விடுதிகளிலும், மற்றும் தேவஸ்தானத்தாரால் குத்தகைக்கு விடப்பட்டுள்ள தனியார் நடத்தும் சில சிறந்த உணவு விடுதிகளிலும் மட்டுமே கிடைக்கும். இவற்றைப் பற்றிய சில அடிப்படை விவரங்கள், யாத்திரிகர்களின் நன்மையின் பொருட்டு கீழே வழங்கப்பட்டுள்ளன.

### அன்னபூர்ண ஹோட்டல்

*(சங்கு மிட்டா காட்டேஜ் அருகில்)*

சிற்றுண்டி நேரம்: 5 A.M. to 10 P.M.
சாப்பாடு நேரம் : 9 A.M. to 3 P.M.
6 P.M. to 10 P.M.

அளவு சாப்பாடு ரூ. 1-75
முழுசாப்பாடு ரூ. 3-00

*(சனிக்கிழமைகளில் பாயசம் வழங்கப்படும்)*

இவற்றைத்தவிர கார வகைகளும், குளிர்பானங்களும், சூடான பானங்களும் இங்குக் கிடைக்கப் பெறலாம்.

### உட்லேண்ட்ஸ் ஹோட்டல்

*(தி. தி. தேவஸ்தான விருந்தினர் விடுதிக்கு அருகில்)*

சிற்றுண்டி நேரம் : 6 A.M. to 10-00 P.M.
சாப்பாடு நேரம் : 11 A.M. to 2-30 P.M.
6 P.M. to 10-00 P.M.

தமிழ்நாடு சாப்பாடு ரூ. 4-00
வடஇந்தியச் சாப்பாடு ரூ. 6-00
அளவு சாப்பாடு ரூ. 1-75

இவற்றைத் தவிர இனிப்பு வகைகளும், குளிர்பானங்களும் நியாயமான விலையில் இங்குக் கிடைக்கும்.

### காஃபி போர்டு

*(கல்யாண கட்டாவிற்கு அருகில்)*

சிற்றுண்டி நேரம் : 5 A.M. to 10 P.M.
மினி காஃபி (4 அவுன்ஸ்) 40 காசு
ஒரு கோப்பை காஃபி (6 அவுன்ஸ்) 60 காசு

இவற்றைத் தவிர சிற்றுண்டி மற்றும் குளிர்பானங்கள் போன்ற வசதிகளும் உள்ளன.

இந்நிறுவனத்தாரின் மற்றொரு கிளை பி. பி. ஷெட்டிற்கு (க்யூ ஷெட்டிற்கு) அருகில் உள்ளது.

வேலை நேரம் : 5 A.M. to 10 P.M.

தயிர்சாதம் (ஒரு பாக்கெட்) ரூ. 0-60
எலுமிச்சை சாதம் ,, ரூ. 0-60

குளிர்பானங்களும் கிடைக்கும்.

### டீ போர்டு

*(ஆழ்வார் ஏரிக்கு அருகில்)*

வேலை நேரம் : 6 A.M. to 11 A.M.
2 P.M. to 6 P.M.

டீ 25 காசு.
ஆம்ப்ரோ க்ளுகோ பிஸ்கட்டுகள்
(ஒரு பாக்கெட்) 75 காசு.

### தி. தி. தேவஸ்தான விருந்தினர் விடுதி

சிற்றுண்டி நேரம் : 6 A.M. to 9 A.M.
3 P.M. to 6 P.M.
சாப்பாடு நேரம் : 11 A.M. to 2 P.M.
7 P.M. to 9 P.M.

முழு சாப்பாடு ரூ. 3-00

இவைத்தவிர கார வகைகளும், இனிப்பு வகைகளும் குறைந்த விலையில் கிடைக்கும்.

*(சாப்பாட்டுக்கும், சிற்றுண்டிக்கும் 3 மணி நேரத்திற்கு முன்பாகவே தங்கள் தேவைக்கு தகவல் தருதல் அவசியம்)*

### திருப்பதியில் தி. தி. தேவஸ்தான உணவு விடுதி

*(இரண்டாவது புதிய சத்திரத்திற்கு அருகில்)*

சிற்றுண்டி நேரம் : 5 A.M. to 9-30 A.M.
2-30 P.M. to 6 P.M.
சாப்பாடு நேரம் : 10-30 A.M. to 2 P.M.
6-30 P.M. to 9 P.M.

அளவு சாப்பாடு ரூ. 1-50
தயிர் (ஒரு கப்) ரூ. 0-40

இதைத் தவிர சிற்றுண்டி வகைகள், ஆம்ப்ரோ க்ளுகோ பிஸ்கட்டுகள், குளிர்பானங்கள் முதலிய உணவு வசதிகளும் உண்டு.

தி. தி. தேவஸ்தானத்தின் முதல் சத்திரத்தில் உள்ள மற்றொரு தேவஸ்தான உணவு விடுதியிலும் சாப்பாட்டைத் தவிர மற்றைய சிற்றுண்டி வகைகள் குளிர் பானங்கள் போன்ற வசதிகள் காலை 5 மணி முதல் இரவு 9 மணி வரை யாத்திரிகர்களுக்குக் கிடைக்கும்.

# அனுமன் கதை



## 19. மயங்கி விழுந்தான்!

அனுமன் இந்திரன் வந்தவன் என்
கொல்ஈ தமைந்தான்
இனியன் எற்றுவன் களிற்றினோ
டெடுத்தென எழுந்தான்
தனுவின் ஆயிரம் கோடிவெம் கடுங்
கணை தைக்க
நினைவும் செய்கையும் மறந்துபோய்
நெடுநிலம் சேர்ந்தான்!

*(174, பிரமாத்திரப் படலம், யுத்த காண்டம்)*

இலக்குவனைப் போலவே, அங்கதன், சுக்ரீவன் முதலானோரும் இந்திரசித்து செலுத்திய நாகாஸ்திரத்தால் பெரிதும் துன்புற்றிருந்தனர்.

''இராமனது வலத்தோளையொத்த இலக்குவன் வாழ்வும் ஒழிந்தது; குரங்கின் சேனையும் அழிந்தது!'' என்று தன்னுள் எண்ணிய இந்திரசித்து மங்கலவொலி முழங்க இராவணனது அரண்மனையைப் போய்ச் சேர்ந்தான். தந்தையாகிய இராவணனுக்குச் செய்தியைக்கூறி இந்திரசித்து தன்னிருப்பிடம் போய்ச் சேர்ந்தான்.

இலக்குவனுக்கும் வானரங்கட்கும் நேர்ந்த நிலையை எண்ணி விபீடணன் பலவாறு புலம்பலானான். பல்வேறு உபாயங்களால் இலக்குவனுக்கும் வானரங்கட்கும் நேர்ந்த துன்பத்தைப் போக்க முடியும் என்று அனலன் என்னும் அமைச்சன் விபீடணனுக்கு ஆறுதல் கூறினன். பின்னர், இராமபிரான் இச்செய்தியை அறிந்து போர்க்களம் குறுகி ஆக்நேயாஸ்திரத்தால் அங்குச் சூழ்ந்திருந்த இருளைப் போக்கினார். பிணமலைகளிடையே தன் தம்பியைக் கண்டு புலம்பினார். நாகபாசத்தால் விளைந்த வினைவை விபீடணன் மூலம் கேட்டறிந்தார். தன் தம்பிக்காக உயிர் விடத்துணிந்தார். இதனையறிந்த கருடபகவான் அங்குத் தோன்றி நாகபாசத்தை விடுவித்தார். அனைவரும் பிழைத்தெழுந்தனர்.

இவ்வேளையில் அறிவிற் சிறந்தவனான அனுமன் இராமபிரானிடம் பின்வருமாறு வேண்டிக் கொண்டான்:

''தரும உள்ளம் படைத்த அன்புடையோனே! நாம் இப்போது அமைதியாக இருந்து விடுவோமேயானால், 'இலக்குவன் இறந்தேபோனான்!' என்று எண்ணித் தலைவியாகிய பிராட்டியார் பெரிதும் வருந்துவார். நாம் மகிழ்ச்சியால் பேரொலி எழுப்பினால், அதனைக் கேட்டுப் பிராட்டியார் துயரம் நீங்குவார். நாம் பிழைத்ததை அறிந்து அரக்கர்களும் பெரிதும் அச்சம் கொள்ள ஏதுவாக இருக்கும். எனவே, மகிழ்ச்சியால் பேரொலி எழுப்ப எங்களுக்கு அனுமதி தர வேண்டும்.''

அனுமன் வேண்டுகோளுக்கு இராமபிரான் அனுமதி தந்தார். எனவே, வானரர்கள் அண்டங்களும் பிளந்து போகுமாறு மகிழ்ச்சியால் பேரொலி எழுப்பினர். அப்பேரொலியை இராவணன் கேட்டான். மீண்டும் போர்க்களம் புகுமாறு இராவணன் இந்திரசித்துவைக் கேட்டுக்கொண்டான்.

திரு. மா. சீதாராமன், M.A., B.Ed.,
பெருங்கட்டூர்.

வானரர்க்கும் அரக்கர்க்கும் போர் மூண்டது. வானரத்தலைவர் ஆறு வெள்ளஞ் சேனைகளை அழித்தனர். இலக்குவன் நான்கு வெள்ளஞ் சேனையை அழித்தான்.

இடபன் என்ற பெயருடைய வானர வீரனை அரக்கன் ஒருவன் கொல்லமுற்பட்டான். அப்போது அனுமன் அங்கே வந்து தோன்றினன். வானளாவிய நெடிய உருவங்கொண்ட அனுமன் மார்பின்மேல் நெருப்புப் பொறி தோன்றுமாறு வச்சிரதம்ஷ்ட்ரன் என்னும் அரக்கன் தண்டுகொண்டு அடித்தான்.

அனுமன் அவ்வரக்கனைத் தன் இடக்கையால் பற்றித் தன் வலிமையையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து ஒரே குத்தில் அவ்வரக்கனைக் குத்திக் கொன்றான். இப்போரில் அரக்கர் படைத்தலைவர் பலரும் மாண்டனர். இச்செய்தியைக் கேட்ட இராவணன்

# தி. தி. தேவஸ்தான தமிழ் சமய வெளியீடுகள்

| | ரூ. | பை |
|---|---|---|
| அஷ்டோத்ர சகஸ்ரநாம அர்ச்சனை ... | 1 | 00 |
| பாலசரிதம் (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) ... | 0 | 75 |
| பால பாகவதம் (செவ்வைச் சூடுவார்) முதல் பாகம் ... | 4 | 00 |
| ,, ,, இரண்டாம் பாகம் ... | 4 | 00 |
| தசரூபகம் (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) ... | 3 | 50 |
| குருபரம்பரை (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) ... | 3 | 00 |
| திருமலை வழிகாட்டி ... | 0 | 25 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மகாத்மியம் (தலபுராணம்) ... | 2 | 00 |
| ஸித்தாந்த த்ரய சங்க்ரஹம் (திரு. ஓ. வி. கபிஸ்தலம் தேசிகாச்சார்யா) ... | 2 | 50 |
| ஸ்ரீராமஜெயத் திருப்புகழ் பகுதி I, பகுதி II. (Each) (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) ... | 3 | 00 |
| சர்வ தேவதா பூஜா விதானம் — தி. தி. தே — ... | 0 | 70 |
| ஸுப்ரபாதம் (பொருளுடன்) ,, ... | 0 | 50 |
| ஸுப்ரபாதம் ,, ... | 0 | 12 |
| செம்பொருள் (எஸ். கிருஷ்ணவேணி அம்மையார்) ... | 1 | 50 |
| ஸ்ரீநிவாச கல்யாணம் (வண்ணப்படங்களுடன்) ... | 11 | 50 |
| திருக்குறள் (பொருட்பால்) திரு.டி.பி. பழனியப்பபிள்ளை ... | 7 | 50 |
| ,, (காமத்துப்பால்) (தொகுத்தவர்) ... | 4 | 00 |
| திருவாய்மொழி (விளக்கவுரையுடன்) பாகம் 1 ... | 7 | 50 |
| (திரு. டி. பி. பழனியப்ப பிள்ளை) பாகம் 2 ... | 10 | 50 |
| யாப்பொளி (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) ... | 3 | 50 |
| ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி ஸுப்ரபாதம் (திரு. எம். வி. ராமநாத கனபாடிகள் ... | 0 | 20 |
| நித்யாநுஸந்தானம் — தி. தி. தே — ... | 3 | 75 |
| ஏழுமலை யாத்திரை (திரு. டி. கே. நாராயணன்) ... | 4 | 00 |
| சித்திர ஸுப்ரபாதம் (வண்ணப்படங்களுடன்) தி.தி.தே - ... | 8 | 00 |

## தி. தி. தேவஸ்தான வெளியீடுகளுக்கான விற்பனை சலுகை விவரங்கள்

தி. தி. தேவஸ்தான கல்வெட்டு அறிக்கைகள், தி. தி. தேவஸ்தான கல்வெட்டுத் தொகுதி 1 மற்றும் தொகுதி 5 ஆக மூன்று நூல்களுக்கு, செட்டாக வாங்குவோர்க்கு, 12½% தள்ளுபடி வழங்கப்படும்.

'ஸ்ரீ அன்னமாச்சார்யா சங்கீர்த்தனமுலு' மற்றும் 'தாள்ளபாக்கா பணிகள்' ஆகிய 6 தொகுதிகளை (தெலுங்கு) ஒருமித்து வாங்கினால் 12½% தள்ளுபடி வழங்கப்படும்.

ரூ. 100 அல்லது அதற்கு மேற்பட்டு விளங்கும் விற்பனைக்கு 12½%, ரூ. 500/- விருந்து ரூ. 1000/- வரை விளங்கும் விற்பனைக்கு 20%, ரூ. 1000/-க்கு மேல் இருக்கும் விற்பனைக்கு 30% என்றவாறு கமிஷன் வழங்கப்படும். ரூ. 100/-க்கு மேற்பட்டு சரக்காணைகள் விளங்கினால், அவற்றிற்கான தபால் செலவினை தி. தி. தேஸ்வதானம் ஏற்கும்.

மகரக் கண்ணன் என்பவனைப் போர் புரியுமாறு அனுப்பி வைத்தான். இராமன் கணையால் மகரக் கண்ணன் மாய்ந்தான்.

மகரக் கண்ணன் சேனையோடும் மாய்ந்த செய்தி கேட்டு இராவணன் இந்திரசித்துவைப் போருக்கு அனுப்பி வைத்தான். இந்திரசித்துவின் சேனையைக் கண்ட வானர வீரர்கள் சிதறி யோடலாயினர். வீரம்மிக்க அனுமன் முதலான சிலரே போர்க்களத்தில் எஞ்சி நின்றனர்.

அனுமன் இராமபிரானைத் தன் தோள்மேல் ஏறிக்கொண்டு போர் புரியுமாறு வேண்டிக்கொண்டான். இராமனும் அனுமன் வேண்டுகோளுக்கு இசைந்தான். அங்கதன் தோள்மேல் இலக்குவன் அமர்ந்து கொண்டான். இந்திரசித்துவுக்கும் இராம இலக்குவர்க்கும் கடும்போர் நடைபெற்றது. இப்போரில், 'செல்லுதற்கு இனி வேறிடம் இல்லை!' என்று கூறுமாறு அங்குமிங்கும் வேகமாகச் சாரி திரிந்து அனுமன் இராமனுக்கு உதவினான். அரக்கர்களில் பெரும் பாலோரை இராம இலக்குவர் அழித்திட்டது கண்டு, அஞ்சனை குமாரன் தன் மலைபோன்ற நெடுந்தோள்களைத் தட்டி ஆரவாரஞ் செய்தான்.

அனுமன் போர்க்களத்தில் ஆரவாரஞ் செய்த பேரொலியைக் கேட்டு அரக்கரில் சிலர் அச்சத்தால் தேரிலிருந்தும் கீழே விழுந்தனர்; சிலர் போர் புரிதலை விட்டு ஊருக்கே திரும்பிவிடப் பரபரப்புக் கொண்டனர்; இலங்கையின் மதில் மேலிருந்த அரக்கர் சிலர் உயிருடனே இரத்தத்தைக் கக்கினார்கள்.

அனுமன் எழுப்பிய பேரொலியாகிய இடியைக் கேட்டே அரக்கர் அஞ்சியொடுங்கியதைக் கண்ட இந்திரசித்து அரக்கர்களைப் பெரிதும் கோபித்துக் கொண்டான். இந்திரசித்து தன் தந்தையின் அனுமதியுடன்

பிரம்மாஸ்திரத்தைப் போரில் பிரயோகிக்கத் தயாராகிவிட்டான். மாயத்தில் வல்ல அரக்கர் பலர் மாயப் போர் பல புரிந்தனர்.

அனுமன் அரக்கர்களின் மாயப் போரைக் கண்டு வெகுண்டான். அப்போர்க்களத்தே, முன்பொரு கால் கும்பகருணனால் போடப்பட்டிருந்ததும், தேவரையும் நடுங்கச் செய்வதும், ஒளி மிக்கதுமாகிய தண்டாயுதம் ஒன்றைத் தன் கையில் அனுமன் எடுத்துக் கொண்டான். வீரம் மிக்கவனான அனுமன் அப்போது எப்போதுமில்லாத கொடிய விசையுடன் யமனைப் போன்று சீற்றமுற்றுத் தண்டாயுதத்தால் அரக்கர் பலரைக் கொன்றான். சகலகலா வல்லுநனாகிய அனுமன் யானைப் படை, குதிரைப் படை, தேர்ப்படை, காலாட் படை ஆகிய நால்வகைப் படையினையும் தனி ஒருவனாகவே நின்று எதிர்த்தான்.

தன்னை நோக்கி வந்த பகைவர்களையும், தன் கையில் அகப்பட்டவைகளையும் இரண்டாகக் கிழித்துப் போட்டு அனுமன் தரையில் தேய்த்துக் கொன்றான். இதனால் எங்கும் இரத்தமும் மாமிசமும் நிறைந்து காணப்பட்டது. இதனைக் கண்ட தேவர்கள் "மூவுலகையும் தன் ஆற்றலால் அளந்த முதல்வன் இவன்தானோ!" என வியந்து நின்றனர். பின்னர், அனுமன் அத்தண்டாயுதத்தால் மண்ணையும் விண்ணையும் ஒரு சேர இடித்தாற் போன்று கருதுமாறு தரையிலிருந்தும் எழும்பி வானத்தையடைந்து போர்க்களமெங்கும் திரிந்து கடல் போன்ற அரக்கர் சேனையைப் பொடிப் பொடியாக்கினான். யானைகளையும் குதிரைகளையும் கொன்று குழம்பாக்கிப் பெருங்குரல் எடுத்துப் பேரொலி எழுப்பினான். ஒரு நாழிகைக்குள் ஆறாய்ப் பெருகுகின்ற இரத்த வெள்ளத்துள் நூறாயிரம் யானைகளைப் பிடித்துச் சேறாகுமாறு அவற்றைத் தேய்த்துக்கொன்று திசையானை போல நின்றான். நால்வகைப் படைகளையும் இவ்வாறு கொன்று குவித்து, அரக்கவீரர் பலரையும் அனுமன் வான் உலகம் சேர்ப்பித்தான்.

அனுமனின் கொடிய போர்த் திறம் கண்ட வானரத் தலைவர்களான சுக்ரீவன், நீலன், அங்கதன், குமுதன், சாம்பன், பனசன் முதலான பலரும் திகைத்து நின்றனர். இவர்கள் இவ்வாறு திகைத்து நிற்கும் வேளையில் அகம்பன் என்னும் பெயருடைய அரக்கன் அனுமன் முன் வந்து நின்றான்.

முன்பு முருகக்கடவுளால் சம்மாரம் செய்யப்பட்ட தாருகாசூரன் என்பவனே இப்பிறவியில் அகம்பனாகப் பிறந்துள்ளான். மலைபோன்ற ஆயிரங் கழுதைகள் பூட்டப் பெற்றதும், மனத்தினும் விரைந்து செல்லத்தக்கதுமான தேர் ஒன்றின்மேல் ஏறி அகம்பன் போருக்கு வந்தான். அனுமனின் போர்த் திறம் கண்ட அகம்பன், "இந்திரன் முதலான தேவர் எவரும் இக்குரங்கின் முன் நிற்கவும் முடியாது. எப்படிப்பட்ட வலியவரையும் கொல்லும் திறமுடையது இது! இக்குரங்கினைத் தடுக்காது விட்டால் இப்பூவுலகம் முழுவதையுமே இது அழித்து விடும். அரக்கர் குலத்தையே இது அடியோடு அழித்துவிடும்!" என்று எண்ணிக்கொண்டு அம்புகளைப் பொழிந்தவாறே அனுமன்முன் சென்றான். அனுமனும் அந்த அகம்பனிருப்பிடம் வந்து சேர்ந்தான்.

நால்வகைப் படைகளுடன் அகம்பன் வருதலைக் கண்ட அனுமன் சூரத்தனத்துடன் தான் பற்றியிருந்த தண்டாயுதத்தை வெகு பலமாகச் சுழற்றினான். என்றுமில்லாத வகையில் கொல்லும் தொழிலை அன்று அனுமன் மேற்கொண்டான். யுகமுடிவில் தோன்றுகின்ற காற்றாலும் சலிப்படையாத மேருமலையைப் போன்ற அனுமன், அகம்பன் பார்த்துக் கொண்டிருக்கும்போதே பத்துக்கோடி யானைகளையும், குதிரைகளையும், தேர்களையும் அழித்தான்.

"இராவணனை வெற்றி பெறச் செய்து மானிடர் இருவரையும் தோல்வியுறச் செய்வேன்!" என்று கூறிய வண்ணம் அகம்பன் அனுமனைச் சார்ந்தான். அப்போது, அனுமனும் அகம்பனைப் போர்புரிய வரவேற்றான்.

அகம்பன் சினம் மிக்கவனாய்ப் பெருங்குரல் எழுப்பிக்கொண்டு போர் செய்வதற்காக அனுமனைக் கிட்டி நின்றான்; அம்புகளை மழையென அனுமன்மேல் சொரிந்தான். அவ்வம்புகள் அனுமனின் மார்பின்மீதும், தோளின்மீதும் தெறித்தன. இதனால் அனுமனின் தோளிலிருந்தும் மார்பிலிருந்தும் குருதி பெருகியது. இதனால் சலிப்புற்ற அனுமன் அகம்பனது தேரின் அச்சினை முறித்தான்; சாரதி புரண்டு கீழே விழுமாறு தன் வீர தண்டத்தால் அத்தேரினைக் கண்டதுண்டமாக்கினான். வில்லினால் அனுமனை வெல்ல முடியாது என உணர்ந்த அகம்பன் தானும் ஓர் தண்டாயுதத்தை எடுத்துக்கொண்டான்.

அனுமனும் அகம்பனும் ஒருவரையொருவர் தாக்கினார்கள். வல இடமாகச் சாரி திரிந்தனர்; பேரொலி எழுப்பினர்; வலியதோளைக் கொட்டினர்; ஒருவரையொருவர் மேலும் கீழுமாகப் புரட்டினர்; நெருக்கினர்; நெருக்கிப்பின் நீங்கினர்; தோள்களைத் தட்டி ஒருவரையொருவர் தழுவினர்; மேலே தாவினர்; தரையில் கிட்டினர்; தம்மேல் அறை விழாதபடித் தடுத்தனர்; ஒருவரையொருவர் வெல்வதாக வஞ்சினம் கூறினர்.

இவ்வேளையில், அனுமன் தன் வலிய தண்டத்தால் அகம்பனின் மார்பைத் தாக்க முற்பட்டான். அகம்பன் தன்

தண்டாயுதத்தால் அனுமனின் மோதலைத் தடுக்க முற்பட்டான். அனுமனின் விசையான தாக்குதலால் அகம்பன் பற்றியிருந்த தண்டாயுதத்துடன் அவனின் கையும் அற்றுப் போர்க்களத்தில் வீழ்ந்தது. வலக்கையுடன் தண்டத்தையும் இழந்த அகம்பன் இடக்கையால் அனுமனின் அழகிய மார்பில் அடித்தான். தன் கையில் தண்டாயுதம் இருப்பினும் வெறுங்கையனான அகம்பனைத் தண்டத்தால் தாக்குவது அதருமம் என்று கருதிய அனுமன், அகம்பனைப் போலவே இடக்கையால் தானும் அவ்வரக்கனின் மார்பில் ஓங்கிக்குத்தினான். இதனால் அவ்வரக்கன் வாயிலிருந்தும் இரத்தம் பெருகியது. மீண்டும் அனுமன் அவ்வரக்கனின் காதின் மேல்மோதி, அவனைக்கீழே வீழ்த்தி, அவனுயிரைப் போக்கினான். அகம்பன் மாண்டதும் அரக்கர் சேனை நிலை குலைந்தது.

இவ்வாறு அனுமன் ஒரு திக்கில் போர் புரிந்து கொண்டிருக்கையில், தென்மேற்குத் திக்கில் இலக்குவன் பகைவர்களை அழித்துக் கொண்டிருந்தான். ஆனால் இலக்குவனைப் பற்றிய எந்தச் செய்தியும் அனுமனுக்குத் தெரியாததால், அனுமன் இலக்குவனைத் தேடிச் சென்றான்.

இலக்குவனைத் தேடிச் செல்லும் வழியில், இலக்குவனால் நிகழ்த்தப் பெற்ற பல்வேறு போர்ச் செயல்களின் அறிகுறிகளை அனுமன் கண்டான். இலக்குவனை நெருங்குமுன், இலக்குவன் எழுப்பிய நாணொலி அனுமனின் செவிகளில் வீழ்ந்தது. ஆண்களிற் சிறந்த அனுமன் இவ்வொலியைக் கேட்டுப் பெருமகிழ்ச்சியால் ஆரவாரம் செய்தான். நாணொலி எழுந்த திசை நோக்கிச் சென்ற அனுமன் இலக்குவனைக் கிட்டினான். இலக்குவன் தன்னைப் பார்ப்பதற்கு முன்பாகவே அனுமன் அவன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான். இளையபெருமாளும் அன்பின் மிகுதியால் அனுமனைக் கட்டித் தழுவிக் கொண்டான்.

வானர வீரர்களைப்பற்றி அறிந்து கொள்ள விரும்பிய இலக்குவன், ''ஐயனே! வானர வீரர்கள் எங்குள்ளனர்! சுக்ரீவன் உன்னை ஏன் பிரிந்தான்? அங்கதன் எங்குச் சென்றான்? கடல் போன்ற சேனைப் பரப்பில் நிகழ்ந்தவை ஒன்றும் அறிந்திலேன்! விளக்கமாகக் கூறுக!'' என அனுமனை வேண்டிக் கொண்டான்.

அதற்கு அனுமன், ''ஐயனே! போர்க்களத்தில் நடந்தவற்றை நானும் அறிந்திலேன்! போர் மேற்சென்றவர் திரும்பி வந்த பின்னரே நிகழ்ந்தவற்றை அறிந்து கொள்ள முடியும்!'' எனக் கூறினான். அரக்கரின் மாயையால் போர்க்களத்தில் நிறைந்துள்ள காரிருளைப் போக்கவும், அரக்கர் படை அழியவும் பாசுபதத்தை ஏவுமாறு அனுமன் இலக்குவனை வேண்டிக் கொண்டான். இலக்குவனும் பாசுபதத்தை ஏவினான். இதனால் இருள் ஒழிந்தது. அரக்கர் சேனை அழிந்தது. இச்செய்தி இராவணனுக்கு எட்டியது.

போர்க்களத்தில் நிகழ்ந்த இச்செய்தியை இந்திரசித்துவிடம் கூறுமாறு இராவணன் தன் தூதரை அனுப்பி வைத்தான். இராமன் முதலியோர் இருக்கும் இடத்தையும், இலக்குவன் பாசுபதம் விட்டு அரக்கரை அழித்த செய்தியையும் தூதர்கள் இந்திரசித்துவிடம் கூறினர். பிரமமாத்திரத்தாலேயே இராமஇலக்குவரை வெல்ல முடியும் என்று இந்திரசித்து உறுதியாக நம்பினான். எனவே, யாவரும் அறியாதவாறு இந்திரசித்து மாயையால் வானத்தின்கண் மறைந்திருந்தான். இதற்கிடையில் மகோதரன் என்பான் மாயப் போர் பல புரிந்தான்.

மகோதரன் இந்திரனைப் போல் வடிவெடுத்துக் கொண்டான். தன் சேனைகளை இருடியராகத் தன் மாயையால் மாற்றினான். பின் வானரருடன் மகோதரன் போர் புரியலானான். மகோதரனின் மாயத்தையறியாத வானரரும், இலக்குவன் முதலானோரும் இந்திராதி தேவர்களே தம்மீது போருக்கு வருவானேன்? என மனங் குழம்பி நின்றனர். மகோதரனின் மாயச் செய்கையை அவர்கள் அறியவில்லை.

''இந்திரனும் இருடியரும் நம்முடன் போர் புரிய வந்ததேன்?'' என இலக்குவன் அனுமனை வினவிக் கொண்டிருக்கும்போதே, இந்திரசித்து பிரம்மாத்திரத்தை இலக்குவன்மேல் எறிந்தான். நான்முகன் படை தாக்கிய அளவில், வலிய யானை தன் படுக்கையிற் சாய்ந்தாற் போன்று, இலக்குவன் அறிவு ஒடுங்கிச் சாய்ந்தான். மறைந்திருந்து தாக்கும் இந்திரசித்துவின் செய்கையை அறியாத அனுமன் அப்போது சிந்திக்கலானான்.

''நமக்கு இனியவன் இந்திரன். நம்முடன் இவன் பகைமை கொள்ளக் காரணம் என்ன? எதுவாயினும் சரி. ஐராவதம் என்னும் யானைமேல் ஏறி வரும் இவ்இந்திரனை யானையுடனே தூக்கியெறிந்து கொல்லுவேன்! இது உறுதி!'' என்று வஞ்சினம் கூறினான்.

இந்திரனாக வந்துள்ள மகோதரனின் மாயத்தை அறிவில் சிறந்த அனுமனும் புரிந்து கொள்ள முடியவில்லை.

வானில் மறைந்திருந்த இந்திரசித்து இவ்வேளையில் ஆயிரம் கோடிக் கணக்கான அம்புகளை அனுமன்மேல் பொழிந்தான். சிங்க ஏறெனச் சினம் கொண்ட அனுமன் தன்மேல் அவ்வம்புகள் தைத்த அளவில், சிந்தையும் செயலும் ஒடுங்கித் தரையின்மேல் மயங்கி விழுந்தான்!

**(தொடரும்)**

**ஸப்தகிரி**

# முப்புனிதவதிகள்

டாக்டர். ஜி. பு. கோபாலகிருஷ்ண நாயுடு

## திருவாலங்காட்டில் திருநடனம்

இந்நடனக் காட்சியைக் காண சேக்கிழாருடனும், அம்மையாருடனும், நாமும் செல்வோம். பரமசிவனர் அன்புடன் அளித்த அருளைத் தலைமிசை கொண்டு, கயிலையினின்றும் திருவாலங்காட்டினை அடைந்த பக்தப் பெருமகளைக் காண்போம்:

'' கூடுமா றருள்கொ டுத்துக் 'குலவு
தென் றிசையி லென்றும்
நீடுவாழ் பழன மூதூர் நிலவிய
வாலங் காட்டில்
ஆடுமா நடமு நீகண் டானந்தஞ்
சேர்ந்தெப் போதும்
பாடுவாய் நம்மை' யென்றான்பரவு
வார் பற்றும் நின்றான்''

தமது திருவடிக் கீழ்க் கூடியிருக்கும் வாய்ப்பை அருளினர் அகண்ட பரஞ்சோதி. பரவுகின்றவர்களுக்குப் பற்றுடன் நிற்கும் சிவபெருமான் கூறுகிறார், அம்மையாருக்கு.

விளக்கமுடைய தெற்கு திசையில் எப்போதும் அழியாது வாழ்வு தருவது பழையனூர் என்னும் பழம் பதி. இங்கு நிலவிய திருவாலங்காட்டில் கோயில் கொண்ட பெம்மானிடம் பலர் செல்கின்றனர். பக்திப் பரவசத்துடன் அவர்களும் ஆடிப்பாடுகின்றனர்.

(குறிப்பு : திருவாலங்காடு என்ற தலம் சிறந்ததோர் சிவத்தலம்; மூவர் பாடியருளிச் செய்த பெருமை கொண்டது. அரக்கோணம் ரயில் நிலையத்திலிருந்து ஐந்து கல் தொலைவிலுள்ளது.)

ஆலமரக் காடாயிருந்து அதில் இறைவன் வெளிப்பட்டு, நடனஞ் செய்தமையால் இப்பெயர் பெற்றது. இரத்தின சபை எனவும் பெயர் உண்டு. காளியின் பொருட்டு இறைவன் ஊர்த்துவ தாண்டவம் என்னும் திருவடி மேற்றூக்கியக் கூத்துச் செய்த தலம். பதஞ்சலி வியாக்கிரபாத முனிவர்கள், சிவபெருமானுடைய திருநடனம் கண்ட தலம்.

அண்டம் அதிர, ஐயனது திருக்கோலத்தைக் கண்டு களித்த காரைக்கால் அம்மையாரின் ஜீவிய சரித்திரை, அவள் இயற்றிய அற்புதத் திருவந்தாதியும் ஆராயுவோம். இவ்வந்தாதியை அம்மையார் கயிலை நோக்கிச் செல்லும் வழியில், பேய்க்கண வடிவம் வேண்டிப் பெற்றுத் திருக்கயிலை காண வழிப்பட்டுச் செல்லும் வழியில் அருளப்பட்டது. புனிதவதி அம்மையின் ஜீவியமே உலகிற்கு ஓர் எடுத்துக்காட்டு; அன்பையும் அருளையும் அள்ளி அள்ளி வீசும் வாழ்க்கைச் சித்திரம்.

## பிறப்பும் வளர்ப்பும்:

தென்னாட்டில் கடலோரத்தில் கிழக்கரையில் உள்ள நாகப்பட்டினத்திற்குத் தென்திசையில் உள்ளது காரைக்கால் என்ற நகரம். புனிதவதி அம்மை பிறந்தபெருமையால்,இந்நகர் பேரும் சிறப்பும் அடைந்தது. இவ்வூரில் சாகம்பரிதேவியின் திருக்கோயிலுள்ளது. சாகம்பரி தேவியின் பெருமை விளங்கிய தலமாதலால் இந்நகருக்கு சாகம்பரிபுரம் எனப் பெயர் வழங்குகிறது. திருக்கோயில் கொண்ட இறைவன் கைலாசநாதர். இவருடைய அருள் மேலீட்டினால், இங்கு வாழ்ந்த குடும்பமொன்று தெய்வீகத் தன்மையில் புகழ் பெற்றிருந்தது. இக்குடும்பத்தில் வளர்ந்த தனதத்தன் தருமவதி தம்பதியார் குறைவின்றி வாழ்ந்து வந்தனர். தருமத்தின் வழி நின்று வாய்மையில் ஊனமில்லாத சிறப்புடன் செழித்தனர். அவர்கள் செய்த தவத்தால் திருமடந்தை அவதரித்தது போன்று, புனிதவதியம்மையார் அவதரித்தனர்.

தளர் நடைப் பருவத்திலேயே சிவபெருமான் மேல் பக்தியைச் செலுத்தினள். தன்னுடன் விளையாடும் சிறுமிகளுடன் பேசும்பொழுதும், விளையாடும் பொழுதும் சிவபெருமானைப் பற்றிய மொழிகளையே பயின்று வருவாள். பருவமும் அடைந்தாள்; அழகே வடிவமாகக் காணப்பட்டாள் புனிதவதி. இவர்களது மரபுக்கேற்கும் குலத்தில் நாகப்பட்டினத்திலிருந்த நிதிபதி என்பாருடைய மைந்தன் பரமதத்தனுக்கு மணம் பேசிக் கலியாணம் செய்தனர். காரைக்காலிலேயே புனிதவதியார் கணவனோடு வாழ அழகிய மாடம் ஒன்றைஅமைத்து, மகளையும் மருமகளையும் குடும்பத்தில் நிறுத்தினன், தருமதத்தன். புனிதவதியும் பரமதத்தனும் சிறக்கவாழ்ந்து, மகிழ்ச்சியுடன் குடும்பத்தில் ஈடுபட்டனர். பரமதத்தன் இறைவனருளால் வாணிகத் துறையில் மேம்பட்டனன். புனிதவதியாரும் சிவபெருமானது திருவடியின் கீழே, குடும்பத்தைச் செவ்வனே நடத்திவந்தாள்.

## மாம்பழம் மறைந்த மாயம் :

இவ்வாறு இல்வாழ்க்கையில் இனிதே வளர்ந்த புனிதவதிக்கு ஒரு சோதனை உண்டாயிற்று.

தன் கணவன் பரமதத்தனுக்கு அங்கு தொழில் நிமித்தம் வந்த சிலர் அன்பு மிகுதியால் இரு மாங்கனிகள் கொடுத்தனர். அக்கனிகளை இல்லத்திற்கனுப்பி, தான் கூடிய சீக்கிரம் வீடு

வந்துசேருவதாக பரமதத்தன் மனைவிக்குச் சொல்லியனுப்பினன். எப்பொழுதுமே தாமதமாய் வரக்கூடிய கணவன் இன்று விரைவில் வர இருப்பதைக் கண்டு மனம் பூரித்திருந்தாள். பழங்களைக்கழுவி, செம்மைப்படுத்திவிட்டுக் கணவன் வருகையை எதிர்பார்த்த வண்ணமாய் இருந்தாள்.

உச்சி வெய்யில் அப்போது. சிவனடியார் ஒருவர் மிகுந்த பசியுடையவராகி புனிதவதியின் மனையின் கண் வந்து புகுந்தனர். அவரது பசி நோயைப் புனிதவதி கண்டு, மனம் வேதனைப்பட்டாள். அதுவரையிலும் கறியமுது செய்யப்படவில்லை. இப்பெரியோருடைய பசியைத் தீர்க்கவேண்டுமென்று, அவருக்கு மாங்கனி கொண்ட திரு அமுது படைத்தாள். பெரியவர் பசி தீர்ந்து சென்ற காட்சியை சேக்கிழார் சொற்களால் அநுபவிப்போம்:

**''மூப்புறுமத் தளர்வாலு முதிர்ந்து முடு கியவேட்கைத்**
**தீப்பசியி னிலையாலு மயர்ந்தணைந்த திருத்தொண்டர்**
**வாய்புறுமென் சுவையடிசின் மாங் கனியோ டினிதருந்திப்**
**பூப்பயின் மென் குழன்மடவார் செய லுவந்து போயினர்''**

மூப்பினல் வருகின்ற தளர்ச்சியினலும், முதிர்ந்த பசியின் நிலையினலும் அயர்ச்சியுடன் வந்த திருத்தொண்டர் சுவையுடன் பொருந்திய கனியினை இனிது அருந்தி, அம்மையாரது அன்பின் மிக்க செயலைப் போற்றிப் பாராட்டிப் போனர்.

பரமதத்தன் சற்று நேரம் கழிந்து வந்தான். உணவுடன் மாங்கனியும் சமர்ப்பித்தாள் கற்புக்கரசி, கணவனுக்கு. கனியின் சுவையில் ஈடுபட்ட கணவன் இரண்டாம் கனியையும் கொண்டுவரச் சொன்னன். என்னே, மனிதனுடைய தன்மை! தன் மனைவி இரண்டாம் பழத்தைச் சாப்பிடட்டும் என்ற தயாள குணம் கணவனுக்கு மறைந்தது.

புனிதவதியின் மனம் அல்லோல கல்லோலப்பட்டது, இரண்டாம் கனி சிவனடியாருக்கு அளித்துவிட்டனள் அல்லவோ. கணவனிடம் கூறவும் அச்சம். உள் சென்றுள்; வேறு செயல் காணது மெய்ம்மறந்தாள். உற்றவிடத்து உதவும் சிவபெருமான் திருவடிகளைத் தம் மனம் பொருந்தக் கதறினள். இறைவன் திக்கற்றவர்களுக்குத் துணைபுரிபவன். கற்புக்கரசியின் கையினுள் அதிமதுரக்கனி ஒன்று விழுந்தது! அதனைக் கொண்டு கணவனுக்குத் தக்க சமயத்தில் கொடுத்தாள். வணிகன் உண்டான், ஆவலோடு. அக்கனியின் சுவை அபரிமிதமாக இருக்கக் கண்டு, மனைவியிடம் இக்கனி மட்டும் இவ்வளவு மதுரமாயிருப்பதன் காரணம் அறிய முற்பட்டனன். ''முன்பு கொடுத்த மாங்கனியன்று இது; இதன் சுவை பெறுதற்கரியது; இம்மாங்கனி எங்கு பெற்றுய்?'', என, பயபக்தியுடன் ஒடுங்கிய மனைவியை வினவினன். அம்மையார், இறைவர் தமக்குச் செய்த அருளைக் கூறவே, கணவன் நம்பவில்லை. 'இது சிவன் திருவருளாயின், இன்னமும், ஒரு கனி அவனருளால் அழைத்து அளிப்பாய் நீ,' என மனைவியை நம்பாத கணவன் ஆக்ஞை இட்டான். அம்மையார் கலக்கத்துடன் ''இறைவா, ஈங்கு இதனை அருள் செய்யாவிடில் என் உரை பொய்யாகும்'', என்று கதறிக் கொண்டு, கண்ணீரும் கம்பலையுமாய் நின்றனர். ஆனந்தக் கூத்தனின் அற்புத அருள் மீண்டும் புலப்பட்டது. திடீரென ஒரு மாங்கனி அவள் கையில் விழுந்தது. அதிமகிழ்ச்சியுடன் மனைவி தன் கணவனிடம் அம்மாங்கனியைக் கொடுத்தாள். அவன் அதிசயம் மேலிட்டு, கனியைக் கையில் ஏந்தவே, அம்மாங்கனி அவன் கையிலிருந்து மாயமாய் மறைந்தது. வாணிகன் திகிலடைந்தான். பயந்து, மனந்தடுமாறி, தன் மனைவி புனிதவதி ஒரு தெய்வம் என்று கருதி, மனைவியை விட்டு நீங்கிவிடுதல் வேண்டுமென்று தீர்மானித்தான், அறிவை இழந்த கணவன். ஆயினும் அதனை அவர்க்கும் கூறுது, எப்போதும் போல சில நாட்களைக் கழித்தான்.

## பரமதத்தனும் பாண்டி நாட்டு மனைவியும் :

கணவனுக்கு அம்மையாரை விட்ட கலவேண்டுமென்ற ஒரே எண்ணம் தீவிரமாய் எழுந்தது. பிற நாடுகளுக்குச் சென்று, வாணிகம் செய்து நெடு நிதி கொண்டுவருவதாகக் கூறி மரைக்கலம் அமைத்து, கப்பலேறிச் சென்று, அயல் நாடு சேர்ந்தான். சில ஆண்டுகள் அங்கு தங்கி, பெரும் பொருள் ஈட்டி, மீண்டும் திரும்பினன். ஆயினும் காரைக்காலில் இருக்கும் தன் இல்லத்திற்கு வராமல், பாண்டி நாட்டில் கனகலம் என்ற ஊர் சேர்ந்தான். அங்கு இவனைப்பற்றி யாவரும் அறிந்திலர். தன் நிதியின் பலத்தால், அங்கு ஒரு வணிகனது மகளை மணஞ்செய்துகொண்டனன்; ஒரு மகவையும் பெற்றனன். தனது முன்னை மனைவி யாரைத் தான் தொழும் குல தெய்வமாகக் கருதி அம்மையாரின் பெயரையே தன் மகவுக்குஇட்டான்.

பாண்டி நாட்டில் பரமதத்தன் பெருஞ் செல்வத்துடன் வாணிபம் செய்து வருகையில், நம் அம்மையாரின் உறவினர்கள் இதைக் கேள்வியுற்று, உண்மையினை அறிந்து கொண்டு, அவ்வணிகனிருந்த இடத்தில் புனிதவதி அம்மையாரைக் கொண்டுபோய்விடுவது கிரமம் என்று துணிந்தனர். அம்மையாரின் அநுமதி பெற்று, அப்பட்டிணத்திற்கு அம்மையாரைச் சிவிகையில் ஏற்றி, தோழியரும் சுற்றமும் கொண்டு சென்றனர். பரமதத்தன் இவ்விஷயங்கள் அனைத்தும் அறிந்து, கவலைமேற்கொண்டு, தன் இரண்டாம் மனைவியையும் பெற்ற மகவையும் உடன் கொண்டு வந்து புனிதவதி அம்மையாரின் அடியில் தாழ்ந்து, பணிந்து வீழ்ந்தான். இரண்டாம் மனைவியும் மகவும் புனிதவதி அம்மையாரின் அடி வீழ்ந்தனர். அங்கு குழுமியிருக்கும் அடியார்களுக்கு சொல்லலுற்றுன்; ''இவர் மானிடர் அல்லர்; நற் பெருந் தெய்வமே யாவர்'', என்று பயபக்தியுடன் நின்றுர்; கண் கலங்கி, மெய்ம்மறந்து நின்றுன். அங்கு கூடியிருந்த உற்றுரும் மற்றவரும் திக்பிரமை கொண்டனர்.

## புனிதவதியின் தவிப்பு :

புனிதவதி அம்மையார் இது கண்டு பிரமித்தாள். கற்புக்கரசியின்

**எண்ணம் இறைவன்பால் சென்றது.** அம்மையாருக்கு வேறு புகலிடம் இல்லை, இறைவனைத் தவிர. சிவபெருமானுடைய திருவடியைத் துதித்துத் தன் அழகுக்கு இருப்பிடம் தேவையில்லை எனத் தீர்மானித்து, ஈசனை வேண்டுகிறாள்: "சிவபெருமானே, உம்மிடம் அங்கு உள்ள பூத கணங்கள் போற்றும் பேய் வடிவம் அடியேனுக்குப் பாங்கு பெற அருளுதல் வேண்டும்'', என்று ஒருமையுடன் பரமனடியைப்போற்றி நின்றாள். இறைவன் திருவருளுக்கு அளவு உண்டோ. அம்மையார் வேண்டியவாறே, உடம்பின் அழகு இடமாகப் பொருந்திய ஊனை உதறித்தள்ளினாள். எலும்பு சேர்ந்த உடம்பொன்றே நின்றது. விண்ணும் மண்ணும் போற்றும் பேய்க்கண வடிவமானாள், அழகே உருவான புனிதவதி அம்மையார்.

அப்போது உண்டான ஒருமை ஞானத்தினால் இறைவனை மனமுருகிப் பாடுகிறாள், அற்புதத் திருவந்தாதியில். இவற்றில் ஒன்றை நாம் வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கலாம்:

''எனக்கினிய வெம்மானை யீசனையா
னென்றும்
மனக்கினிய வைப்பாக வைத்தேன்;
—எனக்கவனைக்
கொண்டேன் பிரானாகக்; கொள்
வதுமே யின்புற்றேன்;
உண்டே யெனக்கரிய தொன்று ?''

'சிவபெருமானே, உன்னை மனத்துக்கு இனிய வைப்பு நிதியாக வைத்தேன்; உன்னை எனது தலைவனாகக் கொண்டேன்; இனி எனக்கரிய பொருளுமுண்டோ? ' என அம்மையார் பாடிப் பரவசமடைந்து, ஈசனிடமே திருக்கயிலை செல்லத்துணிந்து, திருக்கயிலையை வழிபடும் வழியில் வடதிசை சென்றனள்.

## திருக்கயிலையில் :

திருகயிலையின் அடிவாரமடைந்து, இளைப்பாறினாள். பிறகு சிவபெருமான் குடிகொண்ட கயிலை மலையைக் காலினால் தாக்குவது இழுக்கு எனத் தலையினால் கயிலை மலையைக் கடந்தாள். பக்தர்கள் மனோபாவம் அளவு கடந்தது; கேட்பதற்கும் பார்ப்பதற்கும் அரிது. இப்பேயுருவம், பித்தன் பிறை சூடியவனுடைய அருளால், அவனுடைய பலத்தால், கயிலை மலையைக் கடந்து சென்றது. பக்தர்கள் பெருமை பக்தர்களுக்குத்தான் தெரியும். இறைவனுக்குச் சொல்லவேண்டுமா. கயிலையில் வீற்றிருந்த உமையாள் கவனித்தாள் இப்பேயுருவை. ஈசன் மகிழ்ச்சியடைந்து, 'அம்மையே' என பக்தமணியைத் தன் பக்கம் அழைக்க, அம்மையும் ஈசனை 'அப்பா' என மனமுருகி, கண்களில் நீர் ததும்ப இறைவனைப்போற்றிய அன்பு, உலகம் உள்ளவரை நீடிக்கும். பின்பு திருவாலங்காட்டில் ஐயனுடைய பெருங்கோலத்தினைக் காணும் பொழுது அவரது திருக்கூத்தைப் பாடியருளினாள் தன் அற்புதத் திருவந்தாதியில்.

## திருவந்தாதியின் விளக்கம் :

சிவபெருமானிடத்தும், பிராட்டியிடத்தும் தந்தை, தாய் என அன்பு கொண்டாள் அம்மையார். சிவபெருமானிடம் ஆட்பட்டு, அவருக்கு ஆளாகிப் பணி செய்திருப்பதுவும், அவரது அடியார்க்கடிமை செய்திருப்பதுமே தமது பிறவிப் பயன் என அம்மையார் கொண்டொழுகினார். அம்மையார் பாடிய மற்றொரு செய்யுளையும் நாம் பாடி மகிழ்வோம்.

''அரனென்கோ? நான்முக
னென்கோ? வரிய
பரனென்கோ? பண்புரை மாட்டேன்
—முரணழியத்
தானவனைப் பாதத் தனிவிரலாற்
செற்றானை
யானவனை யெம்மானை யின்று.''

சிவபெருமானை என்னென்று கூறுவது? அவனை எப்படிப் புகழ்ந்து பாடுவது? எனத் தன் அன்பின் மிகுதியால் பாடுகிறாள், காரைக்கால் அம்மையார். உருத்திரனென்பேனோ? பிரமதேவன் என்பேனோ? அப்பிரமனுக்கு அப்பாற்பட்ட விஷ்ணு என்பேனோ? எம்மானை இன்ன பண்புடையன் என உரையாட்டேன்,' என தன் அறியாமையையே விளக்குவதுபோல, உலகினர்க்கு உரைக்கிறார். மூவருமாகி, மூவர்க்குள்ளும் நிறைந்து, அவரவர் தொழில்களை செய்வித்தும், அதற்கப்பாற்பட்டும் அறியமுடியாது நிற்பவர் சிவபெருமான், எனப் புகழ்கின்றார்.

## ஔவையும் ஆண்டாளும் புனிதவதியும் :

இம்மூவரையும் ஒருங்கே காணும் வாய்ப்பு.

ஆண்டாள் திருமாலின் நடையழகும், வடிவழகும் கண்டு, செயல் மறந்து, வாழ்த்துவதைப் பார்ப்போம்:

''குன்று குடையா எடுத்தாய்! குணம்
போற்றி!
வென்று பகை கெடுக்கும் நின்
கையில் வேல் போற்றி!''

'கோவர்த்தனமலையைக் குடையாக எடுத்த உன் பரந்த குணத்திற்கு என் அஞ்சலி. உன் கை வேலைக் கண்டாலே பகைவர்கள் நடுங்கி ஒடுங்குகின்றனர். பகையை வென்று ஒழிக்கும் உன் கை வேலுக்கு என் வணக்கம்' எனப் பலவாறு இறைவனுடைய வீரதீரத்தைப் புகழ்கின்றாள், விஷ்ணுசித்தனின் மகள்; அவர் கலியைத் தீர்த்த ஆண்டாள்.

ஔவையார் பெயரால் ஔவைக் குறள் என்ற நூல் உண்டு. இக்குறளொன்றை நாம் பணிவுடன் பகர்வோம்;

''என் அகத்து எண்ணெய் இருந்த
அதனை ஒக்குமே
உன் அகத்து ஈசன் ஒளி.''

மனத்துக்குள்ளேயே ஈசன் இருக்கின்றான். அவனுடைய ஒளியானது நம் உள்ளம் முழுவதும் பரவி நிற்கின்றது. எள்ளிலே எண்ணெய் இருக்கிறது; அந்த எண்ணெய், அந்த எள்ளில் இன்ன பகுதியில் இருக்கிறது, இன்ன பகுதியில் இல்லை என்று சொல்ல முடியாது. எள் முழுவதும் எண்ணெய் பரவி நிற்கின்றது. அது போலத்தான் இறைவன், நம் உள்ளத்தில் எங்கும் பரவி நிற்கின்றான்.

காரைக்கால் அம்மையார் சிவபெருமானை ''அப்பா'', என்று அழைத்து, அவருடைய திருநடனத்தைக் கண்டு மகிழ்ந்த வாக்கிலேயே இறைவனிடம் இரண்டறக் கலந்தாள். ஆண்டாள் ஸ்ரீரங்கநாதனைக் காதலித்து அவரையே பதியாகக்கொண்டு, அவரிடம் புகுந்தாள். ஔவையாரோ விநாயகரருளால் கயிலையடைந்து, சிவபெருமானின் ஜோதியில் பாய்ந்தருளினர்.

மூவரையும் கண்டு மகிழ்ந்தோம். இம்மூன்று பக்தமணிகளையும் வாசகர்களுக்கு அறிமுகம் செய்யும் யத்தனத்தில் நாம் ஈடுபட்டு, இறைவன் அருள் பெறுவோம்.

முற்றிற்று

---

அட்டையில்...............



## ஸகஸ்ர கலஸாபிஷேகம்

ஸகஸ்ர கலஸாபிஷேகம் என்பது ஒரு விழா அல்ல: திருமலை கோயிலில் பங்காரு வாகிலிக்கு (தங்க வாயில்) அருகே உள்ள திருமாமணி மண்டபத்தில் நடைபெறும் ஒரு சமய வினை முறையாகும்.

இப்புனிதச் சடங்கு முறை இறைவனுக்கு எப்போது முதல் செய்யப்பட்டு வருகிறது என்பதைப்பற்றிய சரித்திரப் பூர்வமான தகவல் ஏதும் இல்லை. ஆனால் இதனைப்பற்றிய முதல் தகவல் ஒன்றினை கி. பி. 1511-ம் ஆண்டைச் சார்ந்த கல்வெட்டுக்கள் கூறுகின்றன. ஸ்ரீ கிருஷ்ண தேவராயர் ஆட்சியில் ராணுவ அதிகாரிகளில் ஒருவரான உத்திர மேரூரைச் சார்ந்த அப்ப பிள்ளை அவர்கள் இச்சமயச் சடங்கிற்கு நன்கொடை வழங்கியதாக அவை கூறுகின்றன. அதன் பிறகு ஸகஸ்ர கலஸாபிஷேகத்தினைப்பற்றி கி. பி. 1524 மற்றும் கி. பி. 1562-ம் ஆண்டுகளைச் சார்ந்த கல்வெட்டுக்கள் தாம் குறிப்பிடுகின்றன. இவற்றால், இவ்ஸகஸ்ர கலாஸாபிஷேகம் வருடத்தில் ஐந்து தடவைகள் நடைபெற்று வந்ததாகத் தெரிய வருகின்றது.

எது எப்படியாயினும் உலகாயுத ஆன்மிக பயன்களுக்காகப் பக்தர்கள் செய்யும் இச்சகஸ்ர கலஸாபிஷேகம் மிகவும் சிறப்புடையது. பரிமள தீர்த்தத்தினால் (சந்தனம் கலந்த நறுமண நீர்) நிரப்பப்பட்ட 1008 வெள்ளிப் பாத்திரங்கள் (கலசங்கள்) நெற்படுக்கை ஒன்றினை மீது வைக்கப்படும். ஹோமத்தீ வளர்க்கப்பட்டு, மந்திர ஒலிகள் எங்கும் சூழ, வேத முழக்கங்களோடு அப்பாத்திரங்கள் புனிதமாக்கப்படும். பிறகு ஆகம விதிகளின்படி, ஸ்ரீபோக ஸ்ரீநிவாசர்க்கும், ஸ்ரீ மலையப்பசுவாமிக்கும், அவருடைய தேவியர்க்கும், விஷ்வக்சேனருக்கும் புனித நீரினால் அபிஷேகம் செய்யப்படும். அபிஷேகம், ஹோமம் ஆகியவை கோயிலின் தங்க வாயிலில் (பங்காரு வாகிலி) நடைபெறும். இந்நிகழ்ச்சியின் போது மட்டுமே ஸ்ரீ போக ஸ்ரீநிவாசமூர்த்தி கருப்பக் கிருகத்தை விட்டு வெளிவருவார். அந்நிலையிலும், ஸ்ரீ போக ஸ்ரீநிவாச மூர்த்தியையும், மூல மூர்த்தியையும் இணைக்கும் பட்டுக் கயிறு தொடர்ந்து இருக்கும்.

இச்சகஸ்ர கலஸாபிஷேகம் புதன் கிழமைகளில் மட்டுமே நடத்தப்படும். இச்சகஸ்ர கலஸாபிஷேகத்திற்காக விற்கப்படும் டிக்கெட் ஒன்றின் விலை ரூ. 2500/-. டிக்கெட் வாங்கிய நபரைச் சார்ந்த 10 நபர்கள் இவ்அபிஷேகத்திற்கு அனுமதிக்கப்படுவர். அபிஷேகத்தின் இறுதியில், டிக்கெட் வாங்கியவருக்கு வஸ்த்ர பஹுமான மட்டுமன்றி, வடை, அப்பம் தோசை போன்ற பிரஸாதங்களும் வழங்கப்படும்.

இப்புனிதச் சமயச் சடங்கினை நடத்த விரும்பும் யாத்திரிகர்கள், 15 நாட்களுக்கு முன் கூட்டியே செலுத்த வேண்டிய தொகையினை டிமாண்ட் டிராப்ட் ஒன்றின் மூலமாக தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் சார்பில் அனுப்புதல் வேண்டும். 

காமாலை பதின்மூன்று வகைப்படும். இதை மஞ்சள் நோய் என்றும் கூறு வார்கள். உடம்பு, கண், நீர் இவை கள் எரிச்சலுடன் வெளிப்படுதல்: சில சமயங்களில் வியர்வை மஞ்சளித்து வெளிப்படும்.

" பண்பான பித்தத்தில் சேத்துமம் கூடி
பரிசித்தால் காமாலை நண்ணுந் தானே "

என்று கூறியதால் பித்த நாடியில் ஐய நாடி தொட்டு நடக்குமானல் அந்நாடி காமாலையைக் குறிக்கும்.

பொதுக் குறி குணங்கள்:

பசியின்மை, ஏப்பம், செரியாமை, ஓக்காளம், சில சமயங்களில் வாந்தி, வயிறு கடுப்பு முதலான குறி குணங் களைக் காட்டும்.

முதலில் கண் மஞ்சள் நிறமாக மாறும்; பிறகு நாக்கு, முகம், உடல், நகக் கண்கள் மஞ்சள் நிறமடையும். நீர் எரிச்சல் அனல் கூடி வெளியாவ துடன் செந்நிறம்போல் வெளியாவ துண்டு. மலம் அதிகமாகியும், இளகியும், வெண்மை நிறமாகவும், வயிற்று வலியுடனும், வயிறு குத்தல், வயிற்றில் தாங்கமுடியாத வலியுடனும் வெளிப்படும். உடலின் தோல் தவளையின் தோல் போல் சுரசுரப்பாகவும் வரண்டும், அதிக நமைச்சலுடனும், சுருங்கியும் காணும். இந்த வியாதியில் சுரம் தொடர்வதும் உண்டு.

1. வாத காமாலை
2. பித்த காமாலை
3. சேத்தும காமாலை
4. வாத கப காமாலை
5. பித்த கப காமாலை
6. தொந்த காமாலை
7. அழகு காமாலை
8. ஊது காமாலை
9. கும்ப காமாலை
10. குன்ம காமாலை
11. செங்கமலக் காமாலை
12. மஞ்சட் காமாலை
13. வறள் காமாலை.

ஆக காமாலையில் பதிமூன்று வகைகள் உண்டு

இவைகளில் பின்கண்ட காமாலை ஆறும் தீராதவை.

1. வாத காமாலை
2. தொந்த காமாலை
3. அழகு காமாலை
4. கும்ப காமாலை
5. குன்ம காமாலை
6. செங்கமலக் காமாலை

---

டாக்டர். கே. ஸ்ரீநிவாசன்,
ஆரணி.

---

உடலின் இரத்தம் குன்றி வன்மை இழந்த காலத்து பித்தத்தை அதிகப் படுத்தக்கூடியப் பொருட்களை அதிகம் புசிப்பதாலும், அளவுக்கு மிஞ்சிய புணர்ச்சிசெய்வதாலும் ஐயம் மிகுந்து காமாலை நோயை உண்டாக்கும்.

1. வாத காமாலை:

அதிக சோம்பல், கண் பருத்து காணுதல், வயிறு பொருமல், மல பந்தம், சில வேளை தேகம் வீங்குதல், வயிறு இரைதல், புறங்காலும், முகமும் அதைத்தல் முதலிய குறி குணங் களை உடையது.

2. பித்த காமாலை :

மயக்கம், நித்திரை இன்மை, தயக் கம், உடல் வாட்டம், சதா படுக்கை யில் இருக்கவேண்டுமென்ற எண்ணம், இறைந்து பேதியாதல், அதிசுவாசம், வயிறிரைச்சல், அசதி, உடல் வாட்டம், அஜீரணம் முதலிய குறி குணங்களை உடையது.

3 சேத்தும காமாலை :

நகமும், முகமும் அடிக்கடி வியர்த்தல், மேல் மூச்சு, இருமல், உடல் நடுக்கம், மார்பு கனத்தல், நடை தளர்தல், கண் சிவத்தல் என் னும் இக்குணங்களை உடையதாம்.

4. வாத கப காமாலை:

நாக்கும், கண்களும் வெளுத்துக் காணப்படும். நடந்தால் மூச்சு வாங் கும். தேகம் வீங்கிக் காணும். வயிறு இரைதல், பொருமல், அஜீரணம், முகம் நாசி இவைகளில் வியர்வை முதலிய குணங்களுடன் இருமலும் உண்டு.

5. கப காமாலை :

மயக்கம். கை கால்கள் வெளுத்துப் போதல், தேகம் தளர்தல், அஜீரணம், பேதி, தாகம், வயிறு உப்பிசம், வாந்தி, தலைவலி, மனக்கலக்கம் முதலிய குறி களைக் காட்டும்.

6: தொந்த காமாலை :

உடல் கருத்தல், அடிக்கடி குளிர் வருதல், நடுக்கம், அசதி, தேக எரிச் சல், இருமல், தாகம், புளி ஏப்பம், வாய் புளித்தல், பசி, அடிவயிற்றில் வீக்கம் முதலிய குறி குணங்களைக் காட்டும்.

7. அழகு காமாலை

உடம்பு வாட்டமின்றி வெப்பத் துடன் மினுமினுத்தல், கைகால் அசதி, கண், மூத்திரம் இவைகளில் மஞ்சள் நிறம் காணப்படும். நீர் தாரையில் எரிச்சல், அஜீரணம் உப்பிசம் என்னும் இக் குணங்களை உண்டாக்கும்.

8. ஊது காமாலை :

மூத்திரம் மஞ்சள் நிறமுடையதாக இருத்தல், அதி சீதளத்தால் வெப்ப

தயக்கம், கண்களிலும் வாயிலும் நீர் வடிதல், ஆயாசம், மலபந்தம், முகத்தில் மஞ்சள் நிறம், காது மந்தம், தலை நோய், கை கால் ஓச்சல், நடுக்கல், இளைப்பு, தோல் வரண்டு போதல், உள்ளங்கை எரிச்சல், சரீர வீக்கத்துடன் அதிகமாகக் கனத்தல், திமிர் பிடித்தல் போல் உணர்ச்சி முதலிய குறி குணங்களை உண்டாக்கும்.

### 9. கும்ப காமாலை :

உடலும் சிறுநீரும் மஞ்சள் நிறமாக இருத்தல், மாலையில் வியர்வை உண்டாகுதல், வாதம் அதிகரித்தல், கண் சிவத்தல், சோர்வு, மயில் உறக்கம் போல் உறங்குதல், இளகிய மலம், உடம்பு முழுவதும் கெண்டு கெண்டாக வீங்குதல், அடிக்கடி இளைப்பு உண்டாதல் முதலிய குணங்களைக் காட்டும்.

### 10. குன்ம காமாலை :

மஞ்சள் நிறமான குழம்பிய மூத்திரம், வாய் வெளுத்து காணல், மனஞ் சலிப்பு, இருமல் இரைப்பு, படுக்கை தங்காமல் புரளல், அன்ன ஜீரணக் காலத்தில் அடி வயிறு வலித்தல், வாந்தி, கண்களில் மஞ்சள் நிறம் முதலிய குறிகளை உண்டாக்கும்.

### 11. மஞ்சள் காமாலை :

முகம், கால், கை, உள் நாக்கு, மூத்திரம் ஆகிய இவைகளில் மஞ்சள் நிறம், முகத்தில் மினுமினுப்பு. சரீரம் முழுவதிலும் ஊதல், தளர்ச்சி, பசி இன்மை முதலிய குணங்களை உண்டாக்கும்.

### 12. வரட் காமாலை :

மூத்திரம் கருமஞ்சள் நிறமுடையது. அசதி, கை கால் வற்றல், மூத்திரம் சுடுகையுடன் சிவந்து இரங்கல், உடல் முழுவதும் ஊசியால் குத்துவது போன்ற வலி, ருசி இன்மை, மந்த பார்வை, தேகம் கருத்தல் என்னும் இக்குணங்களை உண்டாக்கும்.

### 13. செங்கமலக் காமாலை:

கண்கள் சிவந்து, எரிச்சல், கை கால் அசதி, பசி இன்மை, முகம் வெளுத்தல் முதலிய குறி குணங்களை உடையது.

### மருத்துவம் :

இந்த வியாதியில் உணவாதி முதலிய வேறுபாடுகளினால் உண்டான குற்ற வேறுபாடுகளால் கெடுதி அடைந்த இரச ரத்த தாதுக்களையும் தன்னிலை பிரண்டக் குற்றம் அல்லது குற்றங்களையும் தன்னிலைப்படுத்தும் பொருட்டு தன் அளவில் குறைந்த சிறு நீரையும் கவனிக்க வேண்டும்.

1. ஜலோதாரி மணி அல்லது ஜல மஞ்சரி 1 முதல் 3 மாத்திரை தேனில் கொடுக்கலாம். அல்லது நீரையும் மலத்தையும் வெளிப்படுத்தக்கூடிய குடிநீர்களைக் கொடுக்கலாம்.

### பின்வரும் குடிநீர் மிக முக்கியம்:

| | | |
|---|---|---|
| சரக்கொன்னைப் புளி | பலம் | $\frac{1}{4}$ |
| சிவதை வேர் | பலம் | $\frac{1}{4}$ |
| நீர் முள்ளி, நெருஞ்சில் | பலம் | $\frac{1}{4}$ |

($\frac{1}{4}$ பலம் = 9 கிராம்)

பிறகு உடல் தீயைக் கிண்டி உண்ட உணவை செரிப்பிக்கவும், விருத்தி அடைந்த பிச்சை வெளிப்படுத்தவும், பிச்சால் கெடுதி அடைந்த இரத்தத்தை விருத்தி செய்வதற்கு உடற்கு ஊட்டம் தருவதற்கும் ஆன மருந்துகளை கொடுக்க வேண்டும். அயசத்து அதிகம் கொடுக்கவேண்டும்,

1. அயகாந்த செந்தூரம், 2. ஆறு முகச் செந்தூரம், 3. லோக மண்டூர செந்தூரம், 4. வெள்ளி செந்தூரம், 5. சாந்த சந்திரோதய மாத்திரை, 6. அயமண்டூர வட்டு, 7. அய பிருங்க ராஜ கற்பகம், 8. வெடியுப்புச் சுண்ணம், 9. நவாச்சார குழம்பு முதலிய மருந்துகள் நம் சித்த மருத்துவப்படி சித்தர்கள் கால முதல் கையாண்டு வரப்படுகிறது. ஆனால் ஆங்கில மருத்துவப்படி இதற்கு 22 நாள் மருந்து கொடுக்கின்றார்கள். கேல்ஷியம், குளுகோஸ், நர்மல்சலைன், லிவர் எக்ஸ்ட்ராக்ட் போன்ற மருந்துகள். ஆனால் சித்த மருத்துவத்தில் கரிசலாங்கண்ணி சாற்றினைக் காலை மாலை 1 ஸ்பூன் வீதம் 3 நாள் சாப்பிட்டு காரம் புளி தள்ளி ஆகாரம் உட்கொண்டால் வியாதி மறைந்து போகும்.

*

## ஆர்ஜித தெப்போற்சவம்

திருமலையில் வருடத்தில் மூன்று நாட்கள் நடத்தப்பட்டு வரும் தெப்போற்சவம், இப்பொழுது யாத்திரிகர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் வகையில், ஒவ்வொருவாரமும், செவ்வாய்க் கிழமைகளில் நடத்தப்பட்டு வருகின்றது. அன்று இறைவன் திருப்பள்ளி ஓடையில் (தெப்பத்தில்) எழுந்தருளி பக்தர்களுக்கு அருள் புரிவார். ரூ. 1500/- செலுத்தி பக்தர்களும் இவ்வார்ஜித தெப்போற்சவத்தில் பங்கேற்கலாம். பங்கேற்கும் கிருஹஸ்தர்க்கு, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுருவம் பதித்த சுமார் 5 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கம் ஒன்றும், வஸ்த்ர பஹுமானமும் மேலும் நைவேத்தியமும் வழங்கப்படும். அது மட்டுமன்றி, கிருஹஸ்தரைச் சார்ந்த 10 நபர்கள், இறைவனின் தரிசனத்திற்காக அனுமதிக்கப்படுவர்.

# திருமகள் வெண்பா

திரு. சுந்தரகணபதி, தஞ்சாவூர்.

திங்களை ஒத்த முக மதனை கொண்டு
எங்களை காத்தருள வந்த தாயே
ஞாலத்தை தன் கைத்தே கொண்ட எம்பிரான்
திருமாலின் ஆசை நாயகியே

நும் திரு மலரடி தொழுது—வணங்கும்
எங்களுக்கு நெடுநிலை வாழ்வை தா
தாயே, மை அறு மனம் வேண்டும்
மகிழ்வுடன் நீ அருள் புரிவாயே

நொய்தாள் உடைய தேவியே—கோற்றொடி
மேகலை அணிந்த கையும் வதுவை
வீசும் மென் கதுப்பும் பெற்ற தாயே
எங்களுக்கு அசைவிலா வாழ்வளிப்பாயே

நீள் புருவமுடைய கயல் விழியாளே
ககணமதை காத்தருள் புரிவாய்
நத்தல் இல்லா உன் பேரழகை
காண எங்களுக்கு அருள் புரிவாயே

தேம் கொள் உன் அழகைக் காண
புறக் கண் இரண்டும் போதாதே
உன் அருள் திருமேனி காண
ஞானக் கண் அருளுவாயே

உன் உருவம் நோக்கி வணங்கி நித்தம்
உருகும் எங்களுக்கு நல்லருள் புரி
போது வேய்ந்த உன்னை துதிப்போம்—நற்
பொருள் எங்களுக்கு உணர்த்துவாயே

ஒண் பொருள் திருமேனி கொண்ட
ஞாலத் திருமகளே பூங்கொடியே
கேள் ஆகி கொழுமி வாழ—எங்களுக்கு
நல்லறம் கணிந்தருள் புரிவாயே

புவியாளும் திருமகளே, மன்னுத
செல்வத்தை மடிந்து செல்லல் நீக்கு
ஒப்பற்ற திரு ஞானம் காண
வழி வகுத் தருள்வாயே

நீடு ஓடு இவ்வுலக வாழ்வில்
களி உவகை தனை காண
நீல மேனி கொண்ட மாலின்—நாயகியே
பேறு வகை செய்து அருள்வாயே

உன் திரு கழல் அடைய வேண்டும்
அமுத ஊற்றே அளித்து அருள்புரி
உலக மதனை, உலைவு உருமல்—காத்து
மாய வினையை போக்குவாயே

பாற் கடலில் பள்ளி கொண்ட—நாயகனின்
நெஞ்சில் நீங்கா இடம் பெற்ற
திருமகளே சுந்தரியே எங்களை உயர்த்தி
நன்மை பல புரிந்திடுவாயே

நெடு மா மலர் பல சூட்டுவோம்
உன் எழில் மதி முகம் காட்டி
உலகமனைத்தும் உய்யொளி பெற
நல் வழி பல செய்வாயே

தனியாத நல்லறிவு புகட்டி
செருக்கற்ற வாழ்வுதனை
பெற காப்பது உன் கடன் தாயே
கடிது வந்து காத்திடுவாயே

கதிர் விளக்கிய உன் முக மதனை
கண்டவுடன் மனம் பூரித்தோம்
பூ உலகு வான் உலகனைத்தும்
ஆளும் தாயே நலம்பல அருள்வாயே

எங்கள் காண் உள்ளம் குளிர்ப்ப
நீ நல்லருள் சுரந்து
விஞ்சை பல யாங்கள் பெற்று வாழ
நற் புந்தி தனை அளிப்பாயே

அருளின் வாய்ந்த திரு மகளே—உன்
திரு வதன மதை கண்டு,
அகத்தொளி முற்றும் களிப்புற, யாம்
என்றும் உன்னை வழுத்தி இருப்போமே.





# கீதை காட்டும் நல்வழி

## அத்தியாயம்-10
## விபூதி யோகம்
## பகுதி - 1

குடியானவன் ஒருவன் வளம்மிகுந்த வயலில் விதைப்பதில் சோம்பலுறுவ தேயில்லே. ஏனெனில் அவன் விதைப் பதற்கேற்ப பயிரும் நன்கு வளர்ந்து அதிகமதிகம் அவனுக்கு மகசூல் கிடைக்கும் என்பது அவனுக்குத் தெரியும்.

உருக்கிய பொன்னைத் திரும்பவும் உருக்கிஞல் அதிலுள்ள மாசு நீங்கி அது முன்னிலும் அதிகம் ஒளி வீசுகி றது.

அதுபோல கேட்கின்ற மாணவனது சிரத்தை அதிகரிக்கின்ற அளவு சொல் லுகின்ற ஆசிரியரின் ஆர்வமும் அதி கரிக்கிறது. ஈண்டு அர்ஜுனன் தலே மாணுக்கனுக்கு நிகர். ஸ்ரீ கிருஷ்ணன் பரமகுரு. கண்ணனின் அருள்மொழி களே அமிர்த பானம் பண்ணுவது போன்று அர்ஜுனன் மிக ஆவலுடன் கேட்கின்ருன். அதைக் கண்ணுறும் பகவானுக்கு மென்மேலும் அவனுக்கு மேலாம் தத்துவங்களேப் புகட்டவேண் டும் என்ற ஆர்வம் அதிகரிக்கிறது. எனவே அவர் கூறுகிருர்.

பூய ஏவ மஹாபாஹோ
ச்ருணு மே பரமம் வசஃ|
யத்தேऽஹம் ப்ரீயமாணுய
வக்ஷ்யாமி ஹிதகாம்யயா ||1||

''வீரனே! மேலாம் என் மொழியை மீண்டும் கேட்பாயாக. கேள்வியில் உவகையுடைய உனது நலம் கருதி அதை நான் இயம்புகிறேன்.''

நல்ல பசி ஒருவனிடம் இருக்கும் அளவுக்கு அவனுக்கு உணவுப்பொருள் களின் ருசியும் நன்கு தெரிய வரும். பசியே இன்றி அஜீரணத்தால் அவஸ் தைப் படுபவனுக்கு சுவை மிக்க பண் டங்களும் கூட ருசியற்றதாகத் தான் இருக்கும்.

அதுபோல ஆன்மீக நாட்டம் ஒரு வனிடம் இருக்கும் அளவிற்குத்தான் கீதை, உபநிடதம் போன்ற மறை நூல்கள் அவனுக்குப் பயனுள்ளவை யாக அமையும். சிரத்தையும், பக்தி யும் இல்லாதவனுக்கு உயர்ந்த தத்து வங்களே எடுத்துச் சொல்லுதல் உவர் நிலத்தில் பயிரிடுவதற்கு நிகர். சந்த னக் காட்டையே அரசனிடமிருந்து பெற்ற ஒரு ஏழை கரி வியாபாரி அவை சந்தன மரங்கள் என்பதறியாது மீண்டும் முன்பு போலவே அந்த சந் தன மரங்களே வெட்டிக் கரியாக்கி கரி வியாபாரம் செய்தான் என்ற ஒரு கதை உண்டு. அதுபோல 'கீதை வாழ்வின் வழிகாட்டி' 'கீதை ஒரு விளக்கு' 'கீதை இகத்திலும் பர லும் நமக்கு நலம் அளிக்கும் ஒரு அ மறை நூல்' என்ற உறுதியான நம்


திரு. டி. கே. நாராயணன், M.Sc.
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.


கையும், பகவானது அருள் மொ களில் அரிய பக்தியும் நம்மிடம் இரு தல் மிகமிக அவசியமாகும்.

**'आश्चर्यो वक्ता कुशलोऽस्य लब्धा'**

(ஆஸ்சர்யோ வக்தா குசலோऽஸ் லப்தா)— 'புகட்டுபவர் வியக் தக்க மேலானவர். கேட்பவர் கெட் காரணுன சீடன்'— என்ற வேதா வாக்கியம் ஸ்ரீ கிருஷ்ணுர்ஜுன சம் தத்தில் நிரூபிக்கப்படுகிறது.

பகவத் விபூதியை, இறைவன மகிமையைப் பற்றிச் சிந்திக்க சிந்தி மனம் தூய்மையடைகிறது. உபாச வலுக்கிறது. பக்தி பெருகுகிற தியானம் கை கூடுகிறது. பக்தன் வாழ்வில் முன்னேற்றத்தைக் காணு தொறும் பகவானுக்கு அவன் மீதுள் நாட்டம் அதிகரிக்கிறது.

சிறு குழந்தை ஒன்றின் கழுத்தி தங்கச் சங்கிலி ஒன்று கிடக்கிற

அது ஒரு விலை மதிப்புள்ள ஆபரணம் என்று குழந்தைக்கு ஒன்றும் தெரியாது. ஆனால் அந்த நகையினால் குழந்தையின் அழகு அதிகரிப்பதைக் காண்கின்ற அதனது தாயின் மகிழ்ச்சி மேலும் கூடுகிறது. அதுபோல அர்ஜுனனது நலத்தில் நாட்டம் அதிகமுள்ள பகவான் மேலும் தத்துவ ஞானத்தை அவனுக்குப் புகட்டுகிறார்.

ஈண்டு அர்ஜுனனாகிய ஒரு மனிதனோடு பேசிக் கொண்டிருப்பதனால் கால தேச வர்த்தமானத்தில் கட்டுப்பட்டவர்போல தென்படுகிற பகவான் தமது உண்மை சொரூபம் எத்தகையது என்பதை விளக்குகிறார்.

**ந மே விது: ஸுரகணா:**
**ப்ரபவம் ந மஹர்ஷய:**
**அஹமாதிர்ஹி தேவானாம்**
**மஹர்ஷீணாம் ச ஸர்வச: ||2||**

"விண்ணவரும் மாமுனிவர்களும் என் தோற்றத்தை அறியார். ஏனெனில் வானவருக்கும் மாமுனிவர்க்கும் முதற் காரணம் நானே"

இறைவன் அனைத்திற்கும் மூலகாரணம். அவனிடமிருந்து தோன்றி வந்தவை ஏனையவை என்பதால் அவற்றால் தங்களுக்கு முதற்காரணமாயுள்ள பரமபுருஷனின் உற்பத்தியைக் கண்டறிய இயலாது.

மகனின் பிறப்பு, வளர்ப்பு முதலிய விபரங்களைப் பற்றி தந்தைக்கு நன்கு தெரியும். ஆனால் தந்தையின் பிறப்பு பால்யம் குறித்து மகனுக்கு எதுவும் தெரிந்திருக்க வழியில்லை. முன்னைப் பழம் பொருட்கும் முந்தியது அந்த மூலப்பொருள். உண்மையில் பகவானுக்கு உற்பத்தி என்று ஒன்று கிடையாது. பிறவாத அவன் பிறப்பவன் போன்று அவதாரங்களில் தன்னைக் காட்டிக் கொள்ளுகிறான். அந்த அவதார நிலையிலும் அவனது பிரபாவத்தை, அதாவது மகிமையை, முழுதும் அறிந்தவர்கள் எவரே உளர்? அவதார புருஷரான ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியை ஸாக்ஷாத் பரம்பொருள் என உணர்ந்தவர்கள் அவர் காலத்தில் ஒரு சிலரே என்பது மேலோர் கூற்று.

'காளிதாசனை உள்ளபடி அறிந்து கொள்ள காளிதாசனால் தான் முடியும்' என்று நாம் சாதாரணமாக பேச்சில் சொல்வதுபோல இறைவனது முழு மகிமையை இறைவனாலன்றி வேறு எவராலும் உணர முடியாது, அதாவது இறைநிலையை அடைந்த மகான்களாலன்றி அதைப் பூரணமாக உணர முடியாது.

பகவானை உள்ளபடி உணரவல்லவர் யார் என்பதற்குப் பகவானே விடை தருகிறார்.

**யோ மாம் அஜமனாதிம் ச**
**வேத்தி லோக மஹேஸ்வரம்|**
**அஸம்மூட: ஸ மர்த்யேஷு**
**ஸர்வ பாபை: ப்ரமுச்யதே ||3||**

"ஆதி இல்லாதவன் என்றும், பிறவாதவன் என்றும், அனைத்துலகுக்கும் தலைவன் என்றும் எவன் என்னை அறிகின்றானோ அவன் மயக்கம் தவிர்ந்தவன். அவன் பாபங்கள் அனைத்திலிருந்தும் விடுபடுகிறான்."

இயற்கையில் எதைப் பார்த்தாலும் அதனது தோற்றத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள விரும்புவது மனித இயல்பு. இயற்கையில் கட்புலனாகும் பொருள்கள் அனைத்தும் ஒன்றிலிருந்து ஒன்று தோன்றியவையாகும். பரமாத்மாவிடமிருந்து அனைத்தும் தோன்றியுள்ளன என்றால் அப்பரமாத்மா யாரிடமிருந்து தோன்றினார் என்ற கேள்வி நிச்சயம் எழக்கூடும் அல்லவா? அதற்குப் பதில் கூறும் வகையில் பகவான் தம்மை 'அனாதி' என்று சொல்லுகிறார். 'அனாதி' என்றால் 'துவக்கம் இல்லாதவர்' என்று பொருள். தோற்றம் இல்லை என்பதால் அவர் (अज:) பிறவாதவர் ஆகிறார். ஆதி இல்லை என்பதால் பகவானுக்கு அந்தமும் கிடையாது. இதைத் தான் 'ஆதியும் அந்தமும் இல்லா அருட் பெருஞ் சோதி' என்று சான்றோர் குறிப்பிடுகின்றனர்.

சூரியனிடமிருந்து சதா ஒளிக்கிரணங்கள் வந்து கொண்டேயிருந்த போதிலும், அதனால் சூரியனுக்கு எந்த விதத்திலும் குறைவு ஏற்படுவதில்லை. அது போல பரமாத்மாவிடமிருந்து அண்ட பகிரண்டங்கள் தோன்றிக் கொண்டேயிருப்பினும் அவரிடம் எந்தவிதக் குறைவும் நிகழ்வதில்லை. எனவே அவர் 'பூரணர்' எனப்படுகிறார். பரமாத்மா யாண்டும் நிறை பொருளாகத் திகழ்கிறார். அணு முதல் அண்டம் ஈறாக அனைத்தும் அவரது ஆணைக்குட்பட்டு, அவரது திட்டப்படி முறை பிசகாது இயங்குகின்றன. எனவே அவர் லோக மகேசுவரன் எனப்படுகிறார்.

காமாலை நோயால் வருந்துபவனுக்குப் பார்ப்பதெல்லாம் மஞ்சள் நிறமுடையதாகத் தோன்றும். கோளாறு அவனது பார்வையில் தானே ஒழிய பொருள்களில் இல்லை. அது போல மயக்கத்திற்கு உட்பட்டுள்ள மனிதனுக்கு பரமாத்ம தத்துவம் உள்ளபடி புலனாவதில்லை. மயக்கம் நீங்கினவனுக்குத் தான் மேலே சொன்னபடி பரம்பொருளின் உண்மை நிலை புலப்படுகிறது. அந்த நிலைமையில் அத்தகைய மயக்கம் நீங்கிய மனிதன் ஞானத்தை அடைந்தவனாக அனைத்துப் பாபங்களிலிருந்தும் விடுபடுகிறான்.

மலையுச்சியிலிருந்து கீழே வேகத்தோடு பாயும் நீருக்குத் தானாகவே மீண்டும் எவ்வாறு மலையுச்சிக்குப் போவது சாத்தியமாகாதோ, வேருடன் பிடுங்கப்பட்ட மரம் ஒன்றிற்கு எவ்விதம் மீண்டும் பூத்துக் காய்ப்பது சாத்தியமாகாதோ, அது போலப் புலனடக்கம் இல்லாத மனிதனுக்கு பரம்பொருளைப் பற்றிய உண்மையான அறிவு ஏற்பட வழியில்லை.

இயற்கையுடன் கூடிய விபூதிகள் பல இறைவனிடத்திலிருந்து தான் மனிதனுக்குக் கிடைக்கப் பெறுகின்றன. அவை யாவை என்பதைக் கீழ்க்காணும் சுலோகங்களில் பகவான் ஒரு பட்டியலே போட்டுக் காண்பிக்கிறார்.




# எங்களுடைய "ஸப்தகிரி" விற்பனைப் பிரதிநிதிகள்

திரு. கே. ராகவாச்சாரி,
நியூஸ் ஏஜெண்ட்,
ரமணி ஸ்டோர்ஸ்,
கும்பகோணம்.

திரு. வி. வி. ரங்கசுவாமி,
ஸ்ரீ வேங்கடேசாயா ரங்கநாதம்
சிட்பண்ட்ஸ்,
6-14-140, கோட்டூர் (சாலை)
பாளையங்கோட்டை - R.M.S.
திருநெல்வேலி-2.

திரு. பி. கே. சுந்தரராஜன்,
21, மூராரிவரதய்யர் தெருவு,
சேலம் டவுன்.

திரு. எஸ். ராமகிருஷ்ணய்யா,
ஸ்ரீ மாருதி காபி வர்க்ஸ்,
ஸ்டேஷன் ரோடு,
ஹோஸ்பெட் (அஞ்சல்) R. S.
கர்நாடக மாநிலம்.

திரு. சி. எஸ். குண்டுராவ்,
845, பி. பி. கார்டன்,
கே. ஆர். மொஹல்லா (அஞ்சல்)
மைசூர்-4.

திரு. எஸ். ஸ்ரீகாந்த ஐயர்,
7/114, செல்லாண்டி அம்மன்
கோயில் வீதி.
19—வது பிளாக்
மேட்டூர் அணை ஆர். எஸ்.

திரு. ஆர். சம்பத் குமார்,
35, வனப்பட்டரை வீதி,
தெப்பக்குளம்.
திருச்சி-2

திரு. வாசு வெங்கடேஸ்வரன்,
ஸ்ரீ கண்ணன் ஸ்டோர்ஸ்,
மெயின்பஜார், எம். ரெட்டிபட்டி,
(via) அருப்புக்கோட்டை.

திரு. கே. பி. ஆர். சுவாமி,
106, மஹீம் மேன்சன்,
ஸ்டேஷன் ரோடு,
மஹீம், பம்பாய்-16.

பாஸ்கர் நியூஸ் ஏஜென்சி,
டெய்லி மார்கட்,
ஜெய்பூர் (அஞ்சல்)
கோராபுட் மாவட்டம்.

தினமணி ஸ்டோர்ஸ்,
8/1, பழைய போஸ்ட் ஆபிஸ் வீதி
கோயம்புத்தூர்-18

டாக்டர். பி. கே. கேசவன்.
செவன் ஹில்ஸ்,
2, எம்.எம்.எம். ரெட்டி வீதி
ஜோலார்ப்பேட்டை.

திரு. ஏ. அருணாசலம்,
22/13. வாளிபாளையம்.
1-வது வீதி, திருப்பூர்.

திரு. எஸ். என். கிருஷ்ணசர்மா
10-354 சின்னக்கடை பஜார்,
பரமக்குடி (அஞ்சல்)
இராமநாதபுரம் மாவட்டம்.

திரு. கே. எஸ். கோதண்ட
ராமய்யா, M.A., B.O.L,.,B.T.,
ஓசூர். தர்மபுரி மாவட்டம்.

திரு. பி. விஜயேந்திரா,
நியூஸ் ஏஜண்ட்,
நகரி (அஞ்சல்)
சித்தூர் மாவட்டம் (ஆ. பி.)

திரு. ஜி. ஸ்ரீநிவாச ஐயங்கார்,
965, வெங்கோப ராவ் லேன்,
ஸ்ரீ வேங்கடேஸ்வர பெருமாள்
தஞ்சாவூர். [வீதி,

திரு. ஏ. ரங்காச்சார்யா,
12-5-5. எஸ்.வி.என். வீதி,
பாபைய்யா பேட்டை,
சேமன்,
வரங்கல் (அஞ்சல்) ஆ.பி.

திரு. வி. ஆறுமுகம்,
பழைய இரும்பு வியாபாரம்,
72. காந்தி மார்க்கட்,
பொள்ளாச்சி—642001.

திரு. ஏ. கே. சுப்ரமண்யம்,
நியூஸ் ஏஜெண்ட்,
பாகாலா (அஞ்சல்)

திரு. டி. எஸ். கிருஷ்ணமூர்த்தி,
சிரௌதிகள்
74, ஏ, கிழக்கு முதல் தெருவு,
மன்னார்குடி-614001.

திரு. ஏ. முனுசாமி கௌடா,
ஓல்டு போஸ்ட் ஆபீஸ் ரோடு,
முலபாகல்,
கோலார் மாவட்டம்.

திரு. டி. சீனுவாஸாசார்யா,
4, சௌந்தரம்மாள் வீதி,
லட்சுமிபுரம்,
குரோம் பேட்டை, சென்னை-44.

திரு. வி. திருவேங்கடம்,
73, காளிமுத்து பிள்ளை லேன்,
திண்டுக்கல்.

திரு. எஸ். நாகராஜகுப்தா,
நியூஸ் ஏஜண்ட் & ஜெனரல்
மர்ச்சண்ட்,
கிழக்கு பஸ் நிலையம்,
சித்தரதுர்க்கா.

திரு. ஏ. என். கிருஷ்ணமூர்த்தி,
157, கார்டன் ஏரியா,
ஷிமோகா.

திரு. பி. ராம்மோஹன மூர்த்தி,
28-88 ராமேஸ்வரம் அக்ரஹாரம்,
புரதொட்டூர்,
கடப்பை ஜில்லா.

திரு. வி. ஜே. ஜனார்தனன்,
11, புஜங்கராவ் வீதி,
சாலவன் பேட், வேலூர்.

திரு. ஆர். வெங்கடேசன்,
68, தெற்கு மாடவீதி,
திருவொற்றியூர், சென்னை-19.

புத்திர் ஞானமஸம் மோஹ:
க்ஷமா ஸத்யம் தம: சம:|
ஸுகம் துக்கம் பவோऽபாவோ
பயம் சாபயமேவ ச ‖4‖

அஹிம்ஸா ஸமதா துஷ்டிஸ்
தபோ தானம் யசோऽயச:|
பவந்தி பாவா பூதானும்
மத்த ஏவ ப்ருதக் விதா: ‖5‖

"புத்தி, ஞானம், மனக்குழப்பமின்மை (அஸம்மோஹம்) பொறுமை, வாய்மை, புறக்கரணங்களின் அடக்கம் (தமம்), அகக் கரணங்களில் அமைதி (சமம்), இன்பம், துன்பம், அஹிம்சை, மனத்தின் நடுநிலை, திருப்தி, தவம், தானம், புகழ்ச்சி, இகழ்ச்சி ஆகிய பல்வேறு பாங்குகள் உயிர்களுக்கு என்னிடத்திருந்தே உண்டாகின்றன"

புத்தி : ஈண்டு 'புத்தி' என்னும் சொல் நுண்ணறிவு எனப் பொருள் படுகிறது. சத் விஷயங்களை கேட்ட எல்லோருக்கும் நன்கு புரிந்து விடுவதில்லை ஏன்? ஆழ்ந்த கருத்துக்களைக் கிரகிக்க வல்ல அந்தக் கரணம் அவர்களிடத்து இல்லை. எனவே இறைவனைப்பற்றி எத்தனையோ மகான்கள் எவ்வளவோ சொன்னாலும், வேத உபநிடதங்கள் மலை மலையாக நம்மிடையே இருந்தாலும் அதைப் புரிந்து கொள்ள நம்மிடம் நுண்ணறிவு இல்லையெனில் அவற்றால் எந்தப் பயனுமில்லாது போய்விடும். அந்தக்கரணத்தில் தெளிவு ஏற்படுதல் தான் அடிப்படை முக்கியத்துவம் வாய்ந்ததாகிறது.

ஞானம் : புத்தி என்பது அறிவு. அறிவு வேறு ஞானம் வேறு. ஒன்றைப் பற்றி அறிந்து கொள்வது அறிவு ஆகிறது. அது நல்லதாகவுமிருக்கலாம். அல்லது கெட்டதாயிருக்கலாம். அறிவாளிகளெல்லாம் ஞானவான்களாகி விடமாட்டார்கள். அறிவாளி எப்பொழுது ஞானவானாகிறான்? எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருளில் மெய்ப்பொருளைக் காணும் திறம் ஒருவனுக்கு எப்பொழுது உண்டாகிறதோ அப்பொழுதுதான் அவன் ஞானவானாகிறான். ஞானம் என்பது இறையறிவு அல்லது ஆன்ம அறிவாகிறது.

அசம்மோஹம் : மயக்கமின்மை அதாவது எந்த நெருக்கடியிலும் மனக்குழப்பமின்மை என்பது இதன் பொருள். எத்தகைய பெரிய வீரனுக்கும் வாழ்வின் சில இக்கட்டான நிலைமைகளில் மனக் குழப்பம் மேலிடுகிறது. மதி மயக்கத்திற்கு உட்பட்டதனால் தானே சூதாடுவது அதர்மம் என்று தெரிந்தும் தர்மபுத்திரர் சூதாட ஒப்புக் கொண்டு ராஜ்யம் மற்றும் செல்வம், சகோதரர்கள், மனைவி அனைத்தையும் இழந்தார். மதி மயக்கத்திற்கு உட்பட்டதனால் தானே மாவீரன் அர்ஜுனன் போர்க்களத்தில் போர் செய்தலாகிய தனது கடமையைச் செய்ய முதலில் மறுத்தான். மயக்கத்திற்கு உட்பட்டதால்தான்தானே ராமர்காட்டில் சீதையின் சொல் கேட்டு மாய மானைத் தேடி சீதையை இழந்தார். எனவே நெருக்கடி நிலையில் மனக்குழப்பமின்மை இறைவனின் ஒரு அருட்பிரசாதமாகும்.

க்ஷமை : இடுக்கண் வரும் போதும், பிறர் நம்மை துன்புறுத்தும் போதும் அதைப் பொறுத்துக் கொள்ளுதல் க்ஷமை ஆகிறது. பொறுமைக்கு ஈடான உயர்ந்த பண்பு வேறு எதுவுமில்லை எனலாம். ஆங்கிலேயர்களின் அடக்குமுறைகளை யெல்லாம் அமைதியாகப் பொறுத்துக் கொண்டதனால் தான் அண்ணல் காந்திஜியினால் நமக்கு சுதந்திரம் வாங்கிக் கொடுக்க முடிந்தது. ஆன்மீக மார்க்கத்தில் எதிர்ப்

பட்ட இடையூறுகளையெல்லாம் பொறுத்துக் கொண்டதால்தான் பத்தமடையில் தோன்றிய டாக்டர் குப்புசுவாமி சிவானந்தராக ஆக முடிந்தது.

**ஸத்தியம்:** உள்ளதை உள்ளபடிப் பகர்தல் வாய்மை ஆகிறது. மெய்மை வாய்மை, உண்மை ஆகிய மூன்றும் சேர்ந்ததே ஸத்யம் ஆகிறது. 'ஸத்ய மேவ ஜயதே' என்பதுவே நமது இலட்சியமாகும். ஸத்தியத்தைத்துணை கொண்டவனுக்கு, வாழ்வில் வெற்றியே தவிர தோல்வி ஒரு நாளும் ஏற்படாது.

**தமம்:** மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய புறக்கரணங்களை அடக்கி ஆள்வது தமம் ஆகிறது. ஐம்பொறிகளைக் கட்டி ஆளுமளவு ஒருவனுக்கு வாழ்க்கையில் அமைதியும் ஆனந்தமும் மேலோங்குகின்றன.

**சமம்:** அந்தக் கரணங்களாகிய மனம் புத்தி ஆகியவற்றின் கண் அமைதி உண்டாதல் சமம் ஆகும்.

**அஹிம்ஸை:** எவ்வுயிரையும் தன்னுயிராக மதித்து எதற்கும் தீங்கு செய்யாமை அஹிம்ஸை ஆகிறது. 'அஹிம்ஸா பரமோ தர்ம:' என்பது மறை மொழி.

**ஸுகம், துக்கம்:** இன்பமும் துன்பமும் ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்களைப் போன்றவைகளாகும். இரண்டையும் பிரிக்க முடியாது. எந்தப் பொருளிலும், மனிதனது எந்த முயற்சியிலும் இன்பமும் துன்பமும் கலந்தே தான் இருக்கின்றன. எனவே இரண்டுமே பகவானது விபூதிகளாக அமைகின்றன. சேர்ந்தால் இன்பம் உண்டெனின், பிரிந்தால் துன்பம் ஏற்பட்டுத் தானே ஆக வேண்டும். லாபத்தால் இன்பம் உண்டாகுமெனின், நஷ்டத்தால் துன்பம் உண்டாகத்தானே செய்யும். இன்பத்தை வாவாவென்று அழைக்கத் தெரிந்த நமக்குத் துன்பத்தையும் பொறுத்துக்கொள்ளும் மனப் பக்குவம் வந்தமையவேண்டும். துன்பமில்லாத இன்பம் தரணியில் கிட்டவே கிட்டாது.

**ஸமதா:** செயல்களின் விளைவு இரண்டு விதமாகத்தான் அமையும். ஒன்று விருப்பு, மற்றது வெறுப்பு. இரண்டிற்கிடையில் மனதினை நடுநிலையில் வைக்க நாம் கற்றுக் கொண்டால் வாழ்வில் உண்மையான இன்பத்தையும் அமைதியையும் நம்மால் அனுபவிக்க முடியும்.

**துஷ்டி:** நம்மிடம் எவ்வளவு இருந்தாலும் இன்னும் வேண்டும் என்று பேராசைப்படுதல் மனித மனத்தின் பொதுவான இயல்பாகும். பேராசை இருக்கும் இடத்தில் அமைதி இருக்காது, மகிழ்ச்சி இருக்காது. பாதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து. நிறைவான மனநிலையே துஷ்டி எனப்படுகிறது.

**தபஸ்:** புறத்தே பாய்ந்து செல்லும் இயல்புடைய இந்திரியங்களை அடக்கி ஆளுதல் தபஸ் ஆகிறது. இந்திரியங்களைப் புறத்தே விடவிடத் துன்பமும், உள்முகமாக்க ஆக்க இன்பமும் அதிகரிக்கின்றன. 'பொறிவாயில் ஐந்தவித்தான் பொய் தீர் ஒழுக்க நெறி நின்றார் நீடுவாழ்வார்' என்பது குறள் மொழி. காட்டிலோ, ஹோமம் வளர்த்தோ செய்யும் தவத்தைக் காட்டிலும் உலகியல் வாழ்விற்கிடையில் பொறி புலன்களை அடக்கி நிறுத்துதலே அரிய தவம் ஆகிறது.

**தானம்:** தனக்குப் பிடிக்காதனவற்றை, தனக்குப் பயன் படாதனவற்றை பிறருக்குக் கொடுத்தல் தானமாகாது. தனக்குப் பயன்படும் பொருள்களை மனமுவந்து பிறருக்குக் கொடுப்பது உயரிய தானமாகிறது.

**யச:** தர்மத்தைச் செய்வதால் வரும் புகழ்ச்சி.

**அயச:** அதர்மத்தைச் செய்வதால் வரும் இகழ்ச்சி.

மின்சாரம் ஒன்றுதான். ஆனால் ஒரு விசிறி, அடுப்பு, யந்திரம், ரெபிரிஜிரேடர், விளக்கு போன்றவை அதனதன் அமைப்புக்கு ஏற்றவாறு அதைப் பயன்படுத்துவது போன்று ஜீவர்கள் மேற்காணும் விபூதிகளை இறைவனிடத்திலிருந்து தங்களது வினைக்கேற்றபடி பெற்றுக் கொள்கின்றன.

ஈசுவரனுடைய விபூதிகளை அதிகம் பெற்றவர்கள் யார் என்ற கேள்விக்கு அடுத்த சுலோகத்தில் பதில் கிடைக்கிறது.

(தொடரும்)

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| C | = | 3 | P | = | 8 |
| D | = | 4 | Q | = | 1 |
| E | = | 5 | R | = | 2 |
| F | = | 8 | S | = | 3 |
| G | = | 3 | T | = | 4 |
| H | = | 5 | U | = | 6 |
| I | = | 1 | V | = | 6 |
| J | = | 1 | W | = | 6 |
| K | = | 2 | X | = | 5 |
| L | = | 3 | Y | = | 1 |
| M | = | 4 | Z | = | 7 |

மேற் சொன்ன அகராதித் தொகுப்புக்களில் எண் 9ஐ காண்பது அரிது. மேற்படி தொகுப்பைத் திரட்டித் தந்த தத்துவ மேதையின் எண்ணப்படி இப் பரந்த சுற்றுக் கேந்திரத்தின் உயர்ந்த பரப்பில் எண் 9க்கு, ஒன்பது வார்த்தை கொண்ட கடவுளின் பெயர் அமைந்திருப்பதால் அதற்கு ஒருமை எண் என்ற அமைப்புத் தராது கலப்பு எண், பன்மை எண் போன்ற அமைப்பில் அதற்கு பூரண இடம் தரப்பட்டிருக்கிறது. உதாரணமாக 18, 27 போன்றவற்றைச் சேர்த்துச் சொல்லும்போது 9 எழுகிறது. பொதுவாகச் சொல்லப் போனல் கலப்பு எண்களுக்கு அதிகமான அர்த்தமும், அதிசயமான இணைப்புக்களும் இருப்பதால், அதைக் கொண்டவர்களின்பால் ஒருவித ஆழ்ந்த மாயம் சார்ந்த சிந்தனைகளைத் தெரிந்து கொள்வதுண்டு. ஒருவரது பெயரின் அமைப்பைத் தனித்தனி எண்களின் விதிகளைப்பற்றி அவைகளைக் கூட்டியோ, அவரது குடும்பப் பெயர் இருந்தால் அதையும் சேர்த்துப் பலன் தெரிவிக்கலாம். அதாவது பெயருக்கு முன்னல் வரும் 'Initial'ஐ கூட்டிக் கொள்ளலாம். எனவே 'Numeralogy'ப் படி பலன் சொல்லும்போது ஒருவரது பெயர் வார்த்தைகளின் கூட்டுத் தொகையினைக் கொண்டோ அல்லது அவரது பிறந்த மாத தேதி வருடங்களின் கூட்டுத் தொகையினைக் கொண்டோ பலன் சொல்லலாம். பொதுவாக பிறந்த எண் சோதிடத்தையே கணக்கிடுதல் ஆதாரபூர்வமாக கருதப்படுவதால் அதை உலக பூர்வமான விஷயங்களின் வருங்காலத்திற்காகவும், பெயர் எண் ஒருவித பூடகார்த்தமான மாயையின் நிழலில் வருவதால் உலக பூர்வமான நாகரிக கவர்ச்சி அடிப்படையின் நோக்கங்களுக்காகவும் பலன் கொள்ளலாம்.

மேற் சொன்ன வடிவமைப்புக்களின் கீழ் இனி ஒவ்வொரு எண்களின் தனித் தனித்தன்மை, செயல், அதன் ஆக்கம், வீர்யம், போன்றவற்றைக் காட்டும் அடிப்படைக் கொள்கைகளை இனி பகுப்படுத்தித் தெரிவிக்கும் நோக்கத்தைக் காண எழுவோம்.

## எண் 1ன் தன்மைகளும் கொள்கைகளும் :

எல்லா எண்களுக்கும் ஆதாரமான தாகவும் எல்லா உயிர் வாழ்விற்கும் அடிப்படைத்தன்மை உடையதாகவும் உள்ள எண் என வரையறுக்கப்பட்டிருக்கின்றது. எந்த செயல் ஒன்றையும் செய்கையில் தனித்த மாத்திரத்தில் செய்யக்கூடிய திறமை ஒன்று வழி வந்த நபர்களின் சரியான அம்சம்; அவர்கள் செய்யும் செயல் எல்லாம் பொதுவாக கண்டுபிடிப்புக்களைப் பற்றியோ உற்பத்தித்திறன் பற்றியோ எவருடைய உதவியையும் எதிர்பாராது சுய முயற்சியினுலேயோ செய்வதாய் இருத்தல் கூடும்; அவர்கள் தங்கள் கருத்துக்களை வெளியிடத் தயங்கமாட்டார்கள்; அதனுல் வரும் கருத்துத்திரட்சிகள் தாறுமாருய் இருக்கமாட்டா; ஒரு வரையறுக்கப்பட்ட உண்மையைச் சொல்வதற்கு தயங்கமாட்டார்கள். அதாவது தாங்கள் செய்யும் செயலைத் தக்கபடி விளக்கிப் பயன் சொல்லித் தெளிய வைத்தார்கள் என்று வைத்துக்கொள்வோம்; ஆனுல் தங்கள் திறமைக்கோ செயலுக்கோ மீறி ஒருவர் அவர்களை எதிர்பார்க்காமல் எதிர்ப்பார்களேயானுல் அவர்கள் தங்களது பிடிவாதத்தினுலும், சுய தீர்ப்பினுலும் அவர்களை எதிர்க்க முடியாமல் கேட்டவரை மௌனம் சாதிக்கவைத்துவிடுவார்கள். இது பொதுவாக 1ம் எண்ணைக் கொண்ட ஆண் பெண் ஆகிய இரு பாலார்க்கும் சொல்லப்பட்ட கூற்று. எண் ஒன்றை அமைப்பில் கொண்டவர்கள் பேராசைக்காரர்கள்; எதையும் அடைந்து தீரவேண்டும் என்ற அவா கொண்டவர்கள். அவர்கள் தாங்கள் செய்யும் செயலின்பொருட்டு வரும் எதிர்ப்புக்களையும் தடையையும் விரும்பமாட்டார்கள். இது அவர்கள் செய்யும் எந்தத் தொழிலையும் பொறுத்தது. அவர்கள் மேற்கொள்ளும் தொழில் அல்லது வியாபாரம் இவற்றுள் தலையாய பங்கு கொண்டு மிக முன்னேற்றமான நிலையை அடைய அயராது உழைப்பார்கள்; தன்னுல் ஆன முயற்சியை எடுக்கும்போது வரும் இடையூறுகளையும் இன்னல்களையும் எதிர்த்து நின்று வாழ்க்கையில் ஒரு குறிப்பிட்ட துறையில் அவரவர் விருப்பப்படி பதவி, பொருள் சம்பாதிப்பார்கள். எண் ஒன்றை அமைப்பில் கொண்டவர்கள் நண்பர்களாக ஏற்றுக் கொள்ளும் நபர்கள் (2,4,7 ஆகிய எண்களைக் கொண்டவர்கள்). முக்யமாக ஒவ்வொருவரும் சம ராத்திரி போன்ற நேரங்களில் ஜெனித்த உச்ச நிலைப்பொழுதைக் கொள்ளும்போது ஆகர்ஷிக்கத்தக்க வகையில் நட்பைப் பெற்றிருப்பார்கள்.

## எண்ணைக்கொண்ட தேதிகள் :

1, 10, 19, 28 தேதிகளைக்கொண்ட எந்த மாதமாகவோ இருக்கலாம். ($1+0$, $1+9$, $2+8=1$).

மேலும் உச்ச காலக் கட்டமான சூரியனின் கிரஹஸ்தானம் (21 ஜூலையிலிருந்து 28 ஆகஸ்டு வரை) என்று சொல்லப்படுகிறதும், மார்ச் மாதம் 21லிருந்து ஏப்ரல் 28 வரை உள்ள நாட்களில் சம ராத்திரியை சூரியன் சந்தித்துக்கடக்கின்ற காரணத்தாலும் மேற்படி நாட்களில் அதிக சிரேஷ்டமாக எதிர்பார்க்கும் அளவுக்கு எண்ணின் உச்சகட்டம் ஸ்தம்பிக்கும்.

**எண்ணின் தேவதை : சூரியன்.**

**முக்யமான தினங்கள் ! ஞாயிறும், திங்களும்.**

முக்யமான தேதிகள்: 1, 10, 28, 19

முக்யமாக வேண்டிய நட்பு ; 2,4,7ம் எண்களைக் கொண்டவர்களுடன்.

முக்யமான நிறங்கள் : தங்க மஞ்சள் இழைகள். மஞ்சள் , வெளிர் மஞ்சள், வெளிர்மஞ்சளிலிருந்து பழுப்பும், பழுப்பு மஞ்சள் வரையும்.

முக்யமான மணிகள் (நகைகள்); கோமேதகம் (புஷ்பராகம்), அம்பர் நிமிளைப்பிசின். வெளிர்மஞ்சள் வைரம் போன்றவற்றில் மோதிரமோ நகைகளோ அணிதல்.

முக்யமான உடைகள் ;

பொதுவாக எல்லா நிறங்களைவிட பழுப்பு (Brown) நிறங்கள் மெல்லியதாகவோ அடர்ந்தோ காணப்படும் ஆடைகளிலோ, அல்லது மஞ்சள் வரிகள் சார்ந்தோ. தங்க நிறம் சார்ந்தோ காணப்படும் உடைகளிலோ நாட்டம் செலுத்தி அணியலாம். மேலும் படுக்கை அறைகளிலும் மஞ்சளையோ, பழுப்பையோ கொண்ட விதங்களாக இருக்கலாம்.

சங்கீதத்தில் ;

பொதுவாக உரத்த கருவிகளின் (இராணுவத்தினைப்பற்றி) (பேண்ட்) இசையையோ, காற்றை உள்ளிழுத்து உணர்ச்சியைக் கிளப்பி ஊக்கமளிக்கும் காற்றுக் கருவிகளின் இசையையோ, வெறியூட்டும் கிளுகிளுப்பூட்டும்பலத்த இசையையோ, விரும்பி கவனம் செலுத்துபவர்களாக இருப்பார்கள்.

உடற் கோளாறு பற்றி :

இதய சம்பந்தமான நோய்கள் சாதாரணமாகவோ, ஆழ்ந்தோ, காணப்படும். இருதயத் துடிப்பு மிகுந்தோ, முறையில்லாத இரத்தச் சுற்றோட்டத்தால் வரும் கோளாறுகளோ ஏற்படலாம். வயோதிகப் பருவத்தில் அதிக இரத்த அழுத்தம் உண்டாகும். கண்களில் கோளாறு உண்டாகலாம். Astigmatism என்ற நோய்க்கு ஏதுவாகலாம்: பொதுவாக கண்ணைப்பற்றிய சோதனையை அவ்வப்போது செய்து கொள்வது நல்லது.

முக்யமான மாற்றங்கள் ;

பொதுவாக 19-ம் 28-ம் 37-ம்55-ம் வருடங்களில் ஒருவாறு உடற் கூற்றிலோ உடல் சுகாதாரத்திலோ குறிப்பிடத்தக்க மாற்றங்கள் நேரலாம்.

எச்சரிக்கை ;

பொதுவாக எச்சரிக்கையாகயிருக்க வேண்டிய மாதங்கள் அக்டோபர், டிசம்பர், ஜனவரி போன்றன. மேற் சொன்ன மாதங்களில் நோய்க்கான அறிகுறிகள் வரக்கூடுவதால் எச்சரிக்கையாக இருத்தல் நலம். அதிகமான வேலை செய்ய வேண்டாம்.

முக்யமான இயற்கை வைத்தியம் ;

உலர்ந்த திராட்சை, குங்குமப்பூ, இஞ்சி, எலுமிச்சை, மிளகு, பேரிச்சை, ஜாதிக்காய், ஆரஞ்சு போன்றவற்றை அவ்வப்போது உணவோடு சாதாரணமாகவோ சேர்த்துக் கொள்ளுதல் நலம். பொதுவாக பார்லி நீரோ, பார்லி ரொட்டியோ அவசியம் உண்ண வேண்டும். பொதுவாக மேலும் சுத்தமான தேனைச் சாப்பிடுதல் போஷாக்கு அளிக்கும். ஆனால் எந்த ஆகாரத்திலும் அளவோடு சாப்பிடும் பழக்கம் முக்கியம்.

முக்யமான நபர்கள் ;

அலெக்ஸாந்தர், கோல்ட்ஸ்மித், அன்னிபெஸண்ட் கோதே, மூர், ஜோதிட சிகாமணி 'சீரோ' போன்றவர்கள்.

(தொடரும்)

# ஓர் அறிவிப்பு

கி. பி. 15-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தத் தெலுங்கு இசைக் கவிஞரும், அவ்வேழு மலைகளில் நின்றவண்ணம் கோலம் கொண்டிருக்கும் வேங்கடவனின் சிறந்த பக்தருமான ஸ்ரீ தாள்ளபாக்க அன்னமாச்சார்யார் அவ்நெடியோன் மீது பக்திச் சுவையும் காதற்சுவையும் மிக்குஒளிர 32,000 கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். அன்னாரின் அச்சீர்மைமிகு கீர்த்தனைகளின் புகழ் எங்கும் பரவும் வகையில் அக்கவிஞரின் நினைவாக, திருப்பதியில் ரூ 4.5 இலட்சம் செலவில் 'ஸ்ரீ அன்மாச்சார்யா கலாமந்திரம்' ஒன்று கட்டப்பட்டுள்ளது. தற்போது அக்கலா மந்திரத்தில், சமயப்பற்றும் ஆன்மீகப்பற்றும் எங்கும் தழைத்தோங்கும் வகையில் நூலகம் ஒன்று திறக்கப்பட்டுள்ளது. இந்நூலகத்திற்கு இந்து சமயம், புராணம் மற்றும் இந்தியக் கலாசாரம் சம்பந்தப்பட்ட பத்திரிகைகள், நூல்கள் பக்தர்களிடமிருந்து இலவசமாக வரவேற்கப்படுகின்றன. மக்கள் சேவையே மகேசன் சேவையாகக் கொண்டு, இப்புனித சேவையில் பங்கேற்று அவ்வெல்லாம் வல்ல அலர்மேல் மங்கை உறைமார்பனின் அருளைப்பெறுவீர்களாகுக!

செயலாட்சித் தலைவர்,
தி: தி: தேவஸ்தானம், திருப்பதி.

# ஸாராஸாரம்

## (ஓர் தத்துவ நோக்கு)

தந்தை: கோபாலா! இயற்கையிலுள்ள பொருட்களை உற்றுப் பார்த்தால் பல விநோதங்களைக் காணலாம்.

கோபாலன்: எப்படியப்பா?

தந்தை: ஒரு வழிப்போக்கன் ஓய்வுக்காக ஓர் ஆல்மரத்தின் கீழ் படுத்தான். அப்பொழுது அம்மரத்தின் பழம் ஒன்று அவன் தலைமேல் விழுந்தது. அதைக் கையில் எடுத்து, 'என்னே கடவுளின் மடமை! இவ்வளவு பெரிய மரத்திற்குப் பெரிய காய் அல்லவா இருக்க வேண்டும்?' என்று சற்று உரக்கச் சொன்னான். அச்சமயம் அங்கு வந்த முனிவர் ஒருவர் அப்பேச்சைக் கேட்டு, 'ஏனய்யா! என்னமோ சொல்கிறீர! நீர் சொன்னபடி ஒரு பூசணிக்காய் போன்ற காய் உங்கள் தலைமேல் விழுந்திருந்தால் உம்முடைய கதி என்னவாயிருக்கும்? சிறிய ஆலம்பழமானதால் உமக்கு எவ்வித ஆபத்தும் நேரிடவில்லை. இதையறியாமல் கடவுளுக்கு புத்தி குறைவு என்கிறீரே! கடவுளின் உண்மையை அறியாமல் பகவானைக் குறை கூறுவது நல்லதல்ல. உபநிஷத்திலிருந்து ஒரு கதை கூறுகிறேன் கேளும்:

உபநிஷத்தில் குருவானவர் சீடனைப் பார்த்துக் கூறுகிறார்:

குரு: நீ கீழே காண்பது என்ன?

சீடன்: ஓர் ஆலம்பழம்.

குரு: அதை இரண்டு பாகங்களாக்கு.

சீடன்: அங்ஙனமே செய்தேன்.

குரு: அதில் உள்ளதென்ன?

சீடன்: விதைகள்.

குரு: ஒரு விதையை எடுத்து இரண்டு பாகங்கள் ஆக்கு.

சீடன்: அப்படியே செய்தேன்.

குரு: அதில் காண்பதென்ன?

சீடன்; ஒன்றும் காணவில்லை ஐயா:

குரு: விதைக்குள் இம்மரத்தின் வேர், அடி, கிளைகள், இலைகள், பூக்கள், காய் எல்லாம் உண்டாவதற்கு வேண்டிய பொருள் உள்ளது. புறக்கண்ணுக்கு புலன்படாத பொருட்களே உலகத்திலுள்ள மரங்கள் அனைவற்றிலும் மிகப் பெரியதான ஆலமரத்தை உண்டாக்குகிறது. இதனால்தான் ''அணோ ரணீயான் மஹதோ மஹீயான்'' கூறப்படுகிறது. அதாவது பகவான் அணுவுக்கும் அணுவாக இருந்து மிகப்பெரிய உருவம் கொள்வான்என்று கூறப்பட்டுள்ளது. தேவனாகிய மஹாவிஷ்ணு பலியினிடம் ஒரு சிறிய பாலகனாய் வந்து வரம் பெற்ற பிறகு ஓங்கி வளர்ந்து உலகத்தை அளந்தான். இதையே ஆண்டாளும் ''ஓங்கி உலகளந்த உத்தமன்பேர்பாடி'' என்று திருப்பாவையில் குறிப்பிட்டுள்ளார்.

இங்ஙனமே பிரளய காலத்தில் அப்பெருமான் உலகமுண்டு ஓர் ஆலம் துளிரில் படுத்துக்கொண்டு நீரில் மிதந்தார். (''ஆலமா மரத்தின் இலைமேல் ஒரு பாலகனாய் ஞாலம் ஏழும் உண்டான் அரங்கத்தரவினணையான்''-அமலனாதிப் பிரானில் பாண் பெருமான்). அர்ஜுனன் கண்ணனின் உபதேசத்தில் ஐயமுண்டானவனாய் இருக்க, உலகமே உடலாக, மலைகள், ஆறுகள், தேவர்கள், கதிரவன், திங்கள், வாயில் விழுந்து கொண்டிருந்த கௌரவரையும் காட்சியளித்து, தான் தெய்வம், அர்ஜுனன் நினைத்தபடி மானிடன் அல்ல என்பதாக விச்வரூபத்தைக் காட்டினான் கண்ணன். நினைத்தபடி உருவெடுக்க வல்லவன் என்ற உண்மையை உலகுக்கு அறிவிக்கத்தான் ஆலம் விதையை மிகச்சிறியதாகவும், ஆலமரத்தைப் பெரியதாகவும் செய்து கண்கூடாக உண்மையை அறிவித்தான். இத்தகைய பெருமை வாய்ந்த கடவுளை ஒரு நொடியில் புத்தி அற்றவன் என்று சொன்னீரே, இது எவ்வளவு பெரிய தவறு என்பதை இப்பொழுதாவது அறிய வேண்டும்.

வழிப்போக்கன்: ஆமாம் ஐயா! நான் தவறு செய்தேன். என் புத்தி மட்டத்தால் பகவானைப் பழித்தேன். உங்களைப் போன்றவர்களுடன் பழகுவதால்தான் உண்மையை உணரமுடியும். வணக்கம். வருகிறேன்' என்று சொல்லி தன் வழியே போனான்.

கோபாலன்: அப்பா! சிறியதானாலும் நல்ல கதை. தரையின் மேல் படரும் பூசணிக் கொடிக்குப் பெரிய காயும், ஆலமரத்திற்குச் சிறிய காயும் இருப்பதுதான் நலம்.

தந்தை: இதென்ன செடி?

கோபாலன்: ரோஜா செடி.

---

திரு. வங்கிபுரம் ரங்கஸ்வாமி அய்யங்கார்,
திருச்சானூர்.

---

தந்தை: இதோ இங்கே பல மலர்கள் இருக்கின்றன. இவற்றில் நீ எதை விரும்புகிறாய்?

கோபாலன்: ''கேட்கவும் வேண்டுமா? ரோஜாவைத்தான் விரும்புவேன்'' என்று சொல்லி பரபரப்புடன் ஒரு ரோஜா மலரைப் பறித்தான். (கையில் இரத்தம் சொட்டுகிறது) அப்பா! என்ன தெய்வம்! இவ்வளவு அழகான பூஞ்செடிக்குப் புலி நகம் போன்ற முள்ளையா வைப்பது?

தந்தை: ஆத்திரமேன்? மெதுவாகப் பறித்திருந்தால் இக் கஷ்டம் நேரிடாமல் இருந்திருக்கும். உன் தவறுக்கு

தெய்வத்தைப் பழிப்பதா? ஒரு பொக் கிஷம் இருந்தால் அதற்கு பாதுகாப்பு வேண்டாமா? அதைப்போல் கடவுளும் ரோஜாப் பூவின் பாதுகாப்பிற்காக அந்த முள்ளை வைத்திருக்கிறார். பொருளின் மதிப்பிற்கு ஏற்ற பாதுகாப்பு வேண்டும்.

கோபாலன் : அப்பா! இப்பொழுது தான் உண்மையை அறிகிறேன். அது போகட்டும். தேங்காய்க்கு மேல் மட்டை, நார், ஓடு இத்தனையும் வேண்டுமா? இவை பயனற்றவை. விட்டுவிட வேண்டியவை. உள்ளேயுள்ள பருப்பும், நீரும்தானே முக்கியம்?

தந்தை : தென்னை ஓங்கி வளரும் மரமன்றோ? அவ்வுயரத்திலிருந்து விழுந்தால் காய் உடைந்துவிடும். அதற்காக அதைச் சுற்றி அதெல்லாம் வேண்டியதுதான். தேவையான பொருட்களைக் காக்க தேவையில்லாதவையும் வேண்டும். அவையும் மற்றொரு வகையில் தேவையாகின்றன. தென்னை மரத்தைப்பற்றி மற்றொரு விஷயம் சொல்கிறேன்.

கோபாலன்: சொல்லுங்கள் அப்பா. ஆவலுடன் கேட்பேன்.

தந்தை: இந்தத் தென்னை மரத்தைப் பார். மேலே என்ன காண்கிறாய்?

கோபாலன் : தேங்காய்க் குலைகள்.

தந்தை : மற்றொரு பக்கம் ?

கோபாலன் : பானை ஒன்று தொங்குகிறது.

தந்தை : அது எதற்காக ?

கோபாலன் : கள்ளுக்காக.

தந்தை : ஆகையால் தென்னை மரத்தில் காயும், கள்ளும் உண்டாகின்றன. இரண்டிற்கும் ஒரே குணமுண்டா ?

கோபாலன் : தேங்காய் மேலானது. பகவானுக்கு அளிக்கத்தக்கது. கோவிலுக்கு போகும் பொழுது அனைவரும் எடுத்துச் செல்லும் ஓர் உகந்த பொருள்.

தந்தை : கள் எத்தகையது ?

கோபாலன்: அதைக் குடிப்பவர்கள் நினைவு தப்பி உடல் தெரியாமல் கூச்சலிடுவார்கள். மண்ணில் விழுந்து புரள்வதுண்டு.

தந்தை : கள்ளுக் கடைகள் எங்கேயிருக்கும் ?

கோபாலன் ; ஊருக்கு வெளியில் அழுக்கடைந்த இடத்தில் இருக்கும்.

தந்தை : பார்த்தாயா இந்த வினோதத்தை ? ஒரே தாய் வயிற்றில் பிறந்த போதிலும் குண பேதத்தால் ஒரே விதமான மதிப்பைப் பெறுவதில்லை. நீ ஏதாவது ஒரு உதாரணம் தருவாயா ?

கோபாலன் : தெரியவில்லை.

தந்தை: இராவணன், கும்பகர்ணன், விபீடணன் ஆகிய அனைவரும் ஒரே தாய் வயிற்றில் பிறந்த போதிலும் விபீடணனுக்குள்ள மதிப்பு மற்ற இருவருக்கும் இல்லை. ஆதலால் வால்மீகி பகவான், "நது ராக்ஷஸ சேஷ்டிதঃ" என்று விபீடணனுக்கு அரக்கரின் செய்கைகள் இல்லை என்றார். "விபீஷணஸ்து தர்மாத்மா" — விபீடணன் நீதிநெறி பாராட்டுபவன் என்றும் கூறினார். சீதையை இராமபிரானிடம் மரியாதையுடன் ஒப்படைத்து, தன்னை மாத்திரமல்லாமல் இலங்கையிலுள்ளவர்கள் எல்லோரையும் காப்பாற்றிக் கொள்ளும்படி பலமுறை இராவணனிடத்தில் கெஞ்சினான். அது பயனளிக்காததால் கடைசியாக இராவணனை விட்டு நான்கு தோழர்களுடன் உயரக் கிளம்பி, மறுபடியும் ஒரு முறை, "அண்ணா! நீ மூத்தவன். தந்தையைப் போன்றவன். ஆயினும் என் வேண்டுகோளுக்கு இணங்காததாலும், என்னை இச்சபையில் அவமதித்ததாலும் உன்னை விட்டுச் செல்கிறேன்" என்றான். ஒரு நொடியில் ஸ்ரீ இராமரும், இலக்குமணரும், இருந்த இடத்திற்கு வந்து, ஆகாயத்திலிருந்தே வானரர்களைக் கண்டு, "நான் துராத்மாவான இராவணனுடைய தம்பி. விபீடணன் என்ற பெயருள்ளவன். உலகுக்கெல்லாம் தலைவனான ஸ்ரீ இராமபிரானிடம், சரணமடைந்துள்ளேன் என்று அறிவியுங்கள்" என்று கூக்குரலிட்டுக் கெஞ்சினான். உடல் துவக்கு உள்ளவரை விட்டாயினும் ஆத்மபந்துவும் வீடு தருபவனுமான பகவானைச் சரணமடைவதுதான் வழி என்று தன் செயலால் உலகுக்கு அறிவித்த மஹான் விபீடணன். பிறவியால் அரக்கனாயினும் பிரமனை வரம் கேட்கும்போதே எத்தகைய நிலையிலும் அறம் தவறாமல் இருக்கும்படி கேட்ட ஸாத்விகனானவான்.

கோபாலன் : அப்பா! என்னவோ சிறிய பொருட்களைக் கூறி கடைசியாக வீடு பெற பகவானைச் சரணமடைவது தான் எல்லோருக்கும் இயல்பாகும் என்று முடித்ததால் நான் உங்களுக்கு ரொம்பவும் கடமைப்பட்டவனாவேன். உலகில் காண்பதைக் கொண்டுதான் காணாத ஒன்றை அறியவேண்டுமென்ற உண்மையை விளக்க ஆலம், தென்னை மரங்களின் உதாரணங்களே போதும் என்று உறுதியாகக் கூறலாம். இம்மாதிரி இன்னும் பல விஷயங்களை எனக்கு அடிக்கடி அறிவியுங்கள்.

## அறிவிப்பு

**ஸப்தகிரியில் வெளியிடப்படும் கட்டுரைகள் புகைப்படங்கள் ஆகியவற்றிற்கு எந்தவிதமான சன்மானமும் வழங்கப் படமாட்டாது.**

**—தி. தி. தேவஸ்தானம், திருப்பதி**

# செய்திச் சுருக்கம்

## ஸ்ரீ அன்னமய்யாவின் 570-வது ஜெயந்தி விழா

கி. பி. 15-ம் நூற்றாண்டைச்சார்ந்த தெலுங்குக் கவிஞரும், ஸ்ரீ வேங்கடேஸ்வரர்மீது சுமார் 32,000 கீர்த்தனைகளைப் புனைந்தவருமான ஸ்ரீ தாள்ளபாக்க அன்னமாச்சார்யாவின் ஜெயந்தி விழாவை இவ்வருடம் முதல் தி. தி. தேவஸ்தானம் கொண்டாட முடிவு செய்துள்ளதை ஒட்டி, அன்னாரின் 570வது பிறந்த நாள் விழா திருப்பதியில் ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் 22-5-78 முதல் 24-5-78 வரை மூன்று நாட்கள் வெகுச்சிறப்பாக நடைபெற்றது.

22-5-78 அன்று மாலை 6 மணி அளவில் தி. தி. தேவஸ்தான அலுவலகக் கட்டடத்திலிருந்து அன்னமாச்சார்யா கலா மந்திரத்திற்கு, ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மற்றும் ஸ்ரீ அன்னமாச்சார்யா திருவுருவப் படங்களுடன்கூடிய திரு வீதி வலம் ஒன்று ஏற்பாடு செய்யப் பட்டது. பிறகு கலா மந்திரத்தில் பூஜைகளும், வேத பாராயணமும் நடைபெற்றன. பின்னர் 6.30 மணியளவில் திரு. பாலகிருஷ்ண பிரசாத் அவர்களின் இறை வணக்கப்பாடலைத் தொடர்ந்து ஸ்ரீ வேங்கடேஸ்வரா இசை நாட்டியக் கல்லூரி முதல்வர் திரு. டி. பசுபதி அவர்கள் கூட்டத்தினரை வரவேற்றுப் பேசுகையில், அன்னமாச்சார்யா கீர்த்தனைகளின் பெருமைகளைப் பரப்பும் பணியில் தேவஸ்தானம் மேற்கொண்ட முயற்சிகளை எடுத்துக் கூறினார்.

தி. தி. தேவஸ்தான உதவி செயலாட்சித் தலைவர் திரு. வை. வெங்கடப்பையா அவர்கள் இவ்விழா சம்பந்தப்பட்ட மலர் ஒன்றினை வெளியிட்டார். பின்னர், தி தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் டாக்டர். திரு. சி. அண்ணாராவ் அவர்கள் தம்முடைய சிறப்புரையில் அன்னமாச்சார்யா கீர்த்தனைகளின் பெருமையைப் பலவாறு குறிப்பிட்டு, அவருடைய கீர்த்தனைகள் மேலும் பல, பல்வேறு இடங்களில் இருககலாமென்றும் அவற்றைக் கண்டுபிடித்து அச்சில் ஏற்றுவதே நாம் அன்னருக்குச் செலுத்தும் நன்றிக் கடனாகும் என்று கூறினார்.

திரு. காமி செட்டி சீனுவாசலு செட்டி அவர்கள் இவ்விழா தொடர்பான அறிக்கை ஒன்றினை வாசித்தார். பின்னர் அன்னமாச்சார்யாரின் 570-வது பிறந்த நாள் ஒட்டி பல்வேறு பிரமுகர்களிடமிருந்து பெறப்பட்ட வாழ்த்துச் செய்திகளைப் படித்தார். ஹைதராபாத் உஸ்மானியா பல்கலைக் கழகத் தெலுங்குத்துறைப் பேராசிரியர் டாக்டர். திரு. சி. நாராயண ரெட்டி அவர்கள் விழாவிற்குத் தலைமை வகித்து உரையாற்றுகையில் அன்னமாச்சார்யா அவர்கள் பெயருக்காகவோ, புகழுக்காகவோ தம் கவிதைகளைப் படைத்திட்டார் அல்லர் என்றும், அவை, திருவேங்கடவன்மீது அவர் கொண்ட பக்திப் பெருக்கின் வெளியீடுகளே என்றும் கூறினார். தொடர்ந்து பேசுகையில் அவர், அப்பாடல்கள் புதுமைக் கருத்துக்களுடன், கற்பனைப் பெருக்குடன் எளிமையானத் தூயத் தெலுங்கு மொழியில் கவிதை நயம் மிளிர விளங்குகின்றன என்றும் கூறினார்.

பின்னர் 'அன்னமய்யாவும் சூர்தாசரும்' எனும் தலைப்பில் டாக்டர். எம். சங்கமேசம் அவர்களும், 'அன்னமய்யாவின் மொழி நயம்' எனும் தலைப்பில் டாக்டர். ஜே. சூரிய நாராயண அவர்களும், 'அன்னமய்யாவின் தத்துவம்' எனும் தலைப்பில் திரு. வை. சீனுவாச ராவ் அவர்களும் சொற்பொழிவு ஆற்றினர். பிறகு தி. தி. தேவஸ்தான அச்சுக் கூடத்தின் அச்சுக் கோப்புத் துறை ஃபோர்மென் திரு. எம். கோபால் ரெட்டி, தி. தி. தேவஸ்தான புகைப் படக்கலைஞர் திரு. டி. சுப்ரமண்யம், தி தி. தேவஸ்தான ஓவியர் திரு. ஹென்றி ஆகியோருக்கு தி. தி. தேவஸ்தான உதவி செயலாட்சித் தலைவர் அவர்கள் சால்வை போர்த்தி கௌரவித்தார்.

இறுதியில் திரு. ராமசுப்ப சர்மா அவர்கள் நன்றி நவின்றார்.

அன்று இரவு 8½ மணியளவில், திரு. கே. சீனுவாசலு செட்டி மற்றும் தி. தி. தேவஸ்தான சதஸ் கலைஞர் குமாரி. ஆர். ஜி. ஸோபாராஜு அவர்கள் அளித்த அன்னமாச்சார்யாரின் வாழ்க்கையைப்பற்றிய இசை நிகழ்ச்சி ஒன்று நடைபெற்றது.

அடுத்தநாளான 23-5-78 அன்று காலை 'அன்னமாச்சார்யா கவிதைகளில் இசை' எனும் தலைப்பில், ஹைதாரபாத் ஆல் இந்தியா ரேடியோவின் நிலைய இசை அமைப்பாளர் திரு. மஞ்சாலா ஜகன்னாதராவ் அவர்கள் செய்யுமுறை விளக்க உரை ஒன்றினை அளித்தார். அன்று மாலை 5½ மணியளவில் பேராசிரியர். திரு. ஜி. என். ரெட்டி அவர்கள் தலைமையில் அன்னமய்யாவின் கவிதைகளைப்பற்றிய உரைக்கோவை ஒன்று நடைபெற்றது. அன்று இரவு திரு. டி. பசுபதி அவர்களின் இன்னிசைக் கச்சேரி ஒன்றும, அம்முல விசுவநாத பாகவதர் அவர்களின் அன்னமாச்சார்யாரைப் பற்றிய ஹரி கதை நிகழ்ச்சி ஒன்றும் நடைபெற்றன.

இறுதி நாளான 24-5-78 அன்று காலை திரு. எஸ். ஆர். ஜானகி ராமன் (இசை), திருமதி. ஜெயா பசுபதி (இசை), குமாரி. எம். காஞ்சனமாலா (நாட்டியம்) ஆகியோர் பங்கேற்ற இசை மற்றும், நாட்டியம் பற்றிய செய்முறை விளக்கவுரைகள் நடைபெற்றன. அன்று மாலை 6½ மணியளவில் குரு வேம்பட்டி சின்ன சத்தியம் & குழுவினரால் நாட்டிய நிகழ்ச்சி ஒன்று நடைபெற்றது.



---

**திரு. ராவுல சூர்ய நாராயண மூர்த்தி அவர்கள் தி. தி தேவஸ்தானத்தின் புதிய பொது ஜனத் தொடர்பு அலுவலராக நியமிக்கப்பட்டுள்ளார்.**

---

தொடர் கட்டுரை

# முக்கவி கண்ட காப்பியம்

"சுந்தர காண்டம்"

திரு. டி. ஜி. அனந்த சுப்ரமண்யம்,
(காபேயன்)
திருப்பதி.

ஹநுமான் அரக்கர் வீடுகளை யெல்லாம் கண்டு வரும்போது அவ் அரக்கர்களின் வீடுகளில், மந்திரங்கள் ஜபிக்கும் ஓசையையும், வேதங்கள் ஓதும் ஒலியையும் கேட்டார். **स्वाध्या-योऽध्येतव्यः** என்ற உபநிஷத் வாக்யப் படியும், "**स्वधर्मे निधनं श्रेयः परधर्मो भयावहः**" என்ற கீதைப்படியும் அரக்கர்கள் வாழ்ந்து வந்தார்கள்.

இந்த விபரம் வால்மீகத்தில் மட்டும் தான் காணப்படுகிறது. அரக்கர்கள் என்பவர்கள் கொடூரமான காரியங்களைச் செய்பவர்களாக இருந்தாலும், ஸநாதன தர்மங்களைக் கடைப்பிடிப்பதிலும், தர்ம சாஸ்திரங்களில் நம்பிக்கையுள்ளவர்களாகவும் இருந்தார்கள். அவர்களுடைய உருவம், நடை, உடை முதலியவைகள் வெறுக்கத்தக்கவைகளாக இருந்தாலும் அவர்களில் சிலர் தெய்வ வழிபாடும், அக்னி ஹோத்ரம் முதலான வைதிக கார்யங்களைச் செய்பவர்களாகவும் இருந்தார்கள் என்பதை ஹனுமான் கண்டு மகிழ்ந்தார். அரக்கர்களின் வழிபாட்டினைப்பற்றிக்குறிப்பிடும் போது கம்பர் கீழ்வருமாறு கூறுகிறார்.

"சங்கொடு, சிலம்பும், நூலும் பாத
சாலகமும் தாழப்
பொங்கு பல் முரசம் ஆர்ப்ப இல்
உறை தெய்வம் பேணிக்
கொங்கு அலர் கூந்தல செவ்வாய்
அரம்பையர் பாணி கொட்டி
மங்கல கீதம் பாட, மலர்ப்பலி
வகுக்கின்றனரே"

'பல வகை வாத்தியங்களின் முழக்கத்தோடும், தேவ மாதர்களின் இனிய கீதத்தோடும் சில அரக்க மாதர்கள் தாம் செய்யும் கார்யங்களை விரைந்து செய்வதால் தன் கைவளை குலுங்கவும் அணிகள் அசைந்து இசைக்கவும், மனை தெய்வத்திற்கும், குலதெய்வத்திற்கும் புஷ்பாஞ்சலி முதலிய பூசைகளைச் செய்கின்றனர்!' இலங்கையை அடைந்த ஹநுமான் இராவணனுடைய பலபராக்ரமத்தைப் பார்த்ததாக வால்மீகி கூறுகிறார். ஹநுமான் முதலில் கும்பகர்ணனின் மாளிகையை அடைந்தார் என்றும், அங்கே தேவ மாதர்கள் பணிவிடை செய்துகொண்டிருப்பதைப் பார்த்தாரென்றும் கம்பர் வர்ணிக்கிறார்.

"வானவர் மகளிர் தாள் வருடமாமதி
ஆனனம் கண்ட மண்டபத்துள்
ஆய்கதிர்க்
கானகு காந்தம் மீக் கான்ற
காமர் நீர்த்
தூ நிற நறுந்தளி முகத்திற்
றேற்றவே"

கும்பகர்ணன் படுத்து உறங்கும்போது தேவஸ்திரீகள் அவனுக்குக் கால் பிடிக்கின்றனர். அங்ஙனம் பாத சேவை பண்ணுகின்ற அம்மாதர்களின் முக சந்திரன் ஒளி வீசுதலால் அருகிலுள்ள சந்திரகாந்தக் கற்களால் ஆன தூண்கள் மேலிருந்து நீர்சுரந்து உமிழ அந்நீர்த் துளிகள் காற்றினால் வீசப்பட்டு அக்கும்பகர்ணனது முகத்தில் தெறித்து அவனுக்குக் குளிர்ச்சி செய்கின்றன என்று வருணித்துள்ளார். இங்கு இராவணனைப் போல் அவ்வளவு கொடுமை செய்பவன் கும்பகர்ணனல்ல. ஏனெனில் கும்பகர்ணன்கூட நன்மையைச் சொல்லுகிறான். மேலும் கும்பகர்ணன் சாதாரணஅரக்கனாகவே வர்ணிக்கப்படுகிறான்.

அக்கும்பகர்ணனது மூச்சுக் காற்றை வர்ணிக்கிறார் கம்பர்.

"பூமியின் தொகை விசும்பு அணவ
போய்ப்புகும்
கேழில் வெங்கிளர் கிடையுயிர்ப்புக்
கேடிலா
வாழிய உலகெலாம் துடைக்கு
மாருதம்
ஊழியின் வரவுபார்த் துழல்வது
ஒத்ததே."

'கும்பகர்ணனது சுவாசமானது மூக்கினின்று வெளிவரும்போது தெருக்களிலுள்ள புழுதிகளையெல்லாம் வாரியெழுப்பி ஆகாயத்தையளாவச் செலுத்திப் பிறகு திரும்பி மூக்கினுட் புகுவதாகி கற்பாந்த காலத்தில் மிகப் பெரிய சூறுவளியாக நெடுங்காலம் உலகமெங்கும் வீசி அவ்வுலகங்களையெல்லாம் அழிப்பதான சண்ட மாருதமாகிய அவ்வூழி காலத்தின் வரவை எதிர்ப் பார்த்துக் கொண்டு, அதுவரை ஓரிடத்துச் சஞ்சரித்திருந்தாற் போன்றதாகக் காணப்பட்டது.' வால்மீகியும், ஹநுமான் இலங்கையில் எல்லோருடைய மாளிகைகளையும் சுற்றிப் பார்த்ததாகக் கூறுகிறார்.

**अथ मेघ प्रतीकाशं कुम्भकर्णनिवेशनम् ।**
**विभीषणस्त्र च तदा फल्गु स महाकपिः ।**

மேற்கூறிய சுலோகத்தில் ஹநுமான் கும்பகர்ணனுடைய மாளிகையையும், விபீஷணனுடைய மாளிகையையும் பார்த்தார் என்று காணப்படுகிறது. இதன் விளக்கமாகத் தான் கம்பர் விரிவாக வர்ணிக்கிறார். மற்றும் தேடிய இடங்களை கம்பர் ஒரே பாட்டில் கூறி முடிக்கிறார்.

"மாட கூடங்கள் மாளிகை ஒளிகை
மகளிர்
ஆடு அரங்குகள் அம்பலம் தேவர்
ஆலயங்கள்
பாடல் வேதிகை பட்டி மண்டபமுதல்
பலவும்
நாடி ஏகினன் இராகவன் புகழ்
எனும் நலத்தான்."

மண்டபங்களிலும், வீடுகளின் வரிசைகளிலும், மாதர்கள் நர்த்தனம் செய்கின்ற சாலைகளிலும் தேவாலயங்களிலும், இசைபாடும் மேடைகளிலும், பட்டி மண்டபங்களிலும் இன்னும் பல இடங்களிலும் சீதையைத் தேடினார் என்று கூறுகிறார்.

(தொடரும்)

# ராசி பலன்

(1-7-78 முதல் 31-7-78 வரை)

டாக்டர் டி. ஆக்கசோமயாஜி, M.A., Ph.D.
திருபபதி



## மேஷம் :

*[அசுவனி பரணி, கார்த்திகை முதல பாதம முடிய]*

ராகுவினுல பண வரவு, செவ்வாயினுலும சனியினுலும் உடல் நலம் கெடல அலலது தீயன நடைபெறுமோ என அச்சம அல்லது பண நஷ்டம் அல்லது தன் பிள்ளைகள பெண்கள் பற்றிய கவலை அல்லது அவர்களைப் பிரிவதால் கவலை; குருவினுல் நன்மைகள ஏதும் இல்லை. ஆனுல் சுக்ரனுல் பண வரவு, நட்புறவுகள், பெரியோர் களால் பாராட்டப்படல், உறவின ருடன நல்லுறவு வளர்தல, மக்கட் பேறு, சூரியனுல மாதத்தின் முதல் 15 நாடகளின்போது பணவரவு, வெற்றி அல்லது பதவி உயர்வு ஆனுல் இறுதி 15 நாட்களின்போது உடல நலம் கெடல், புதனுலும் மாதத்தின் முதல் 15 நாட்களினபோது பண வரவு, குடும்பத்திற்கு மேன்மை ஏற்படல் இறுதி 15 நாட்களின்போது குடும்பத் தில உட்பூசல்கள் ஏற்படல்.



## ரிஷபம் .

*[கார்த்திகை 2-ம பாதம முதல, ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய]*

ராகுவினுல் கவலைகள், செவ்வாயினுலும், சனியினுலும் உடல் நலம் கெடல் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினுல் அவதிப்படல், தீய நட் புறவினுல துயரங்களுக்குள்ளாதல், பண நஷடம அலலது நலல நண்பர் களை இழத்தல, உற்ருர் உறவினர் களுடன் பிரிவு, குருவினுல பொருள வரவு, சுக்ரனுல் நண்பர்கள் மூலம் புதிய நம்பிக்கைகள வெற்றியடைதற் குரிய வாய்ப்பு, சூரியனுல மாதத்தின முதல் 15 நாட்களின்போது விளைவுகள தீமைகளாக விளங்கக்கூடும். கண் சமபந்தப்பட்ட நோய்களினுல் அவதியுறல் அல்லது மற்றவர்களால் ஏமாற்றப்படல, அல்லது பொருள் நஷ்டம், ஆனுல் இறுதி 15 நாட்களின்போது பண வரவு, வெற்றி மற்றும் பதவி உயர்வு, புதனுல் மாதத்தின முதல் 15 நாட்களினபோது புதிய நணபர்கள் ஆனுல் தன்னுடைய தீய நடத்தையினுல் துன்பங்களுக்குள்ளாதல், இறுதி 15 நாட்களின்போது பொருள் வரவு, குடும்பத்தில் நன்மைகள் ஏற்படல்.



## மிதுனம் :

*[மிருக சீரிஷம் 3-ம் பாதம முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய].*

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள், செவ்வாயினுலும் சனியினுலும பண வரவு, உடல நலமேன்மை, புதிய வீடு, புதிய வீட்டுச் சாமான்கள் மற்றும் புதிய வாகனம் வாங்கப்பெறல், குருவினுல் சச்சரவுகளுக்குள்ளாதல், பொருள நஷ்டம மனயமைதி இழத்தல், சுக்ரனுல் பணவரவு, மதிப்புயர்தல், புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப்பெறல், புதிய வீடு மற்றும் எதிரிகளை வெற்றி கொளல், சூரியனுல் பிரயாணமும் அதனுல் சோர்வும், வயிறு அல்லது கண் சம்பந்தப்பட்ட நோயகளினுல் அவதிபபடல், பொருள் நஷ்டம, புதனுல் மாதத்தின் முதல் 15 நாட்களினபோது இகழ்ச்சிக்குள்ளாதல், இறுதி 15 நாட்களின்போது புதிய நணபர்கள் கிடைக்கப் பெற்ருலும், தன்னுடைய தீய நடவடிக்கையினுல் ஏற்படும் விளைவுகளுக்கு அஞ்சல்



## கடகம் :

*[புனர் பூசம 4-ம பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய]*

ராகுவினுல் பண வரவு, செவ்வாயினுலும் சனியினுலும் பொருள் நஷ்டம், கருத்து வேறுபாடுகள், உடல் நலம் கெடல், வீட்டில களவுபோதல், அலுவலகக கவலை, (மேற்கூறியவற்றில் ஏதாவது ஒன்று நடைபெறும்), குருவினுல் பிரயாணமும அதனுல் உடல் சோர்வும, சுக்ரனுல பண வரவு. மக்கட்பேறு, குடும்பத்தில் மேன்மை, தானிய வகைகள் கிடைக்கப்பெறல், பதவி உயர்வு சூரியனுல் உடல் நலம கெடல், பண நஷ்டம், புதனுல பண நஷ்டம், கருத்து வேறுபாடுகள், ஏமாற்றப்படல், மாதத்தின் இறுதி 15 நாட்களினபோது இகழ்ச்சிக்குள்ளாதல



## சிம்மம் :

*[மகம, பூரம், உத்திரம் முதல் பாதம முடிய].*

ராகுவினுல் பண நஷ்டம், செவ்வாயினுலும் சனியினுலும் கெடுதிகள் ஏற்படல், உற்ருர் உறவினர்களுடன பிரிவு, பிரயாணம், பொருள நஷ்டம், பிள்ளைகளால் மகிழச்சியின்மை, குருவினுல் பண வரவு, பதவி உயர்வு, சுக்ரனுல் குடும்பத்தில் மகிழச்சி, சூரியனுல வெற்றி, பதவி உயர்வு, உடல் நல மேன்மை, மாதத்தின் முதல 15 நாட களின்போது மதிப்புயர்தல், இறுதி 15 நாட்களின்போது பொருள் நஷ்டம, புதனுல் சச்சரவுகளுக்குள்ளாதல், இகழ்ச்சிக்குள்ளாதல், உடல் நலம கெடல், தவருன யோசனையின்பேரில பொருள் நஷ்டம்.



## கன்னி :

*[உத்திரம 2-ம பாதம முதல், அஸ்தம், சித்திரை 2-ம பாதம் முடிய].*

ராகுவினுல் கெடுதிகள் ஏற்படல், செவ்வாயினுல் பண நஷ்டம், மனைவிக்கு மனயமைதியின்மை, கண் சம்பந்தப்பட்ட நோய்களினுல் அவதியுறல், சனியினுல் மகிழ்ச்சியின்மை, குருவினுல் பண நஷ்டம். அலுவலகக் கவலைகள், சுக்ரனுல் மகிழ்ச்சியின்மை, சூரியனுல் வெற்றி, மதிப்புயர்தல், பண வரவு, புதனுல் மாதத்தின் முதல 15

நாட்களின்போது மகிழ்ச்சி, பொருள் வரவு, நல்ல நண்பர்கள், புதிய வாகன வாய்ப்பு, ஆனால் இறுதி 15 நாட்களினபோது சச்சரவுகள், உடல நலம கெடல், இகழ்ச்சிக்குள்ளாதல்



துலா.

[சித்திரை 3-ம பாதம முதல, ஸ்வாதி, விசாகம் 3-ம பாதம முடிய]

ராகுவினால் பண நஷ்டம, செவ்வாயினால் வெற்றி, சனியினால் பொருள் வரவு, மகிழ்ச்சி, குருவினால வெற்றி அல்லது மக்கட்பேறு அல்லது தானிய வகைகள் கிடைக்கபபெறல சுக்ரனால் நணபர்கள, பொருள வரவு, புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப் பெறல், சூரியன மாதத்தின் முதல் நாட்களுககு தீமை விளைவிப்பதால் உடல நலம் கெடல், பண நஷ்டம, ஏமாற்றங்களுககுள்ளாதல, உற்சாகம் இழத்தல் ஆனால் இறுதி 15 நாட்களின்போது வெற்றி, புதனால வெற்றி, பண வரவு, மகிழ்ச்சி, புதிய நணபர்கள அல்லது புதிய வாகன வாய்ப்பு அல்லது மக்கட பேறு



விருச்சிகம :

[விசாகம 4-ம பாதம முதல, அனுஷம் கேட்டை முடிய]

ராகுவினால மகிழ்ச்சி, செவ்வாயினால பொருள் வரவு, சனியினால் பண நஷ்டம், இகழ்ச்சிக்குள்ளாதல, குருவினால் உடல் நலம் கெடல, பிரயாணம், சுக்ரனால கருத்து வேறுபாடுகளும், இகழ்ச்சிக்குள்ளாதலும், சூரியனால் உடல் நலம கெடல, மாதத்தின் முதல 15 நாட்களின்போது மனைவிககு மனமகிழ்ச்சியின்மை, இறுதி 15 நாட்களின்போது ஏமாற்றங்கள, உற்சாகமின்மை, உடல்நலம கெடல, பொருள் நஷ்டம், புதனால் மாதத்தின முதல் 15 நாட்களின்போது ஏமாற்றங்கள ஆனால் இறுதி 15 நாட்களினபோது பணவரவு, எதிரிகளை வெற்றிகொளல், கேளிக்கைகளுககுள்ளாதல்



தனுசு :

[மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம முடிய].

ராகுவினால கருத்து வேறுபாடுகள, செவ்வாயினால இகழ்ச்சிககுள்ளாதல், பண நஷ்டம, சனியினால் சச்சரவுகளுக குள்ளாதல, தீய நடவடிக்கைகளை மேற்கொளல, குருவினால் பண வரவு, கேளிக்கைகளுககுள்ளாதல, சுக்கிரனாலும் பண வரவு, மகிழ்ச்சி, புதிய ஆடை ஆபரணங்கள, நனமை பயக்கும் முயற்சிகளை மேற்கொளல, சூரியனால் பிரயாணம், வயிறு சமபந்தப் பட்ட நோயகளினால் அவதியுறல், அல்லது உடல் நலம கெடல், மனைவிககு மனஅமைதியினமை, புதனால மாதத்தின முதல 15 நாட்களின் போது வெற்றி அல்லது மககட்பேறு அல்லது பணவரவு, இறுதி 15 நாட்களினபோது ஏமாற்றஙகள்.



மகரம் :

[உத்திராடம் 2-ம பாதம முதல், திருவோணம, அவிட்டம 2-ம் பாதம முடிய].

ராகுவினால தீய நடவடிககைகளுக குள்ளாதல், செவவாயினால் உடல்நலம் கெடல், பொருள் நஷ்டம், மதிப்புயர்தல, சனியினால் உற்றார் உறவினர் களுடன பிரிவு, குருவினால மனஅமைதி யிழததல், சுக்ரனால் புதிய ஆடை ஆபரணஙகள, புதிய வீடு அல்லது கேளிககைகளுககு உளளாதல, சூரியனால மாதததின முதல 15 நாட்களின் போது உடல நல மேன்மை வெற்றி, இறுதி 15 நாட்களினபோது பிரயாணம், வயிறு சமபந்தப்பட்ட நோய் களுககுள்ளாதல், அல்லது உடல நலம் கெடல், புதனால் மாதததின் முதல் 15 நாட்களின்போது கருத்து வேறுபாடு களுக்குள்ளாதல், இறுதி 15 நாட்களின்போது வெற்றி அல்லது மக்கட்பேறு அலலது பொருள வரவு அலலது புதிய ஆடை ஆபரணங்கள.



கும்பம்.

[அவிட்டம 3-ம பாதம முதல், சதையம, பூரட்டாதி 3-ம் பாதம் முடிய]

ராகுவினால கவலைகள், செவவாயினால் மனைவியுடன கருதது வேறுபாடு கள் அலலது வயிறு அலலது கண சம்பநதப்பட்டநோய்களுக்குள்ளாதல, சனியினால் பிரயாணம, குருவினால் பண வரவு, அல்லது வாகன வாய்ப்பு அலலது புதிய ஆடை ஆபரணஙகள அலலது மககட்பேறு மற்றும் தன் பிள்ளைகள், பெணகளுககு மேன்மை, சுக்கிரனால் பெணகள் மூலம் இடையூறுகள, சூரியனால் மாதத்தின முதல் 15 நாட களினபோது உடல் நலம் கெடல அலலது எதிரிகள ஏற்படல, இறுதி 15 நாட்களின்போது வெற்றி, உடல நலமேன்மை, புதனால் மாததததின முதல 15 நாட்களின்போது வெற்றி மற்றும் பதவி உயர்வு, இறுதி 15 நாட்களின்போது கருத்து வேறுபாடு களுக்குள்ளாதல.



மீனம்.

[பூரட்டாதி 4-ம பாதம் முதல, உத்திரட்டாதி, ரேவதி முடிய].

ராகுவினால் குடும்பத்தில் சச்சரவு கள, செவவாயினால் உடல நல மேன்மை, வெற்றி, பண வரவு, சனியினாலும் உடல நலமேன்மையும வெற்றியும, குருவினால மனஅமைதி இழதல், சுககிரனால உடல் நலம் கெடல, இகழ்ச்சிக்குள்ளாதல், சூரியனால உடல் நலம் கெடல், எதிரிகளால இடையூறு கள ஏற்படல், புதனால் மாதத்தின முதல 15 நாட்களினபோது குடும்பத்தில் கருத்து வேறுபாடுகள், இறுதி 15 நாட்களின்போது வெற்றி, பண வரவு, பதவி உயர்வு.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T.T.D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D PRESS, TIRUPATI 517501

ஸ்ரீ அனனமாசசாாயா நினைவு நாள் விழாவினபோது இசையுலகக கலைஞா களின் பலவேறு இன்னிசைக கசசேரி கள நடைபெறறன



டாக்டர். எம். பாலமுரளி கிருஷ்ணு அவர்கள்



நாமகிரிபபேட்டை திரு. கிருஷ்ணன அவர்கள்



திரு. சிட்டிபாபு அவாகள்



திருமதி. எம் எல்.
வசந்தகுமாரி அவர்கள்

Regd. No. H/TRP/12

தனிப்பிரதி 50 காசு




திருமலை திருப்பதி தேவஸ்தான

## ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

ஹாரத்தி (ஒவ்வொன்றுக்கும்) கட்டணம் ரூ. 1

### ஸேவைகள் (ஸேவிப்பது மாத்திரம்)

| | | |
|---|---|---|
| சிறப்பு தரிசனம் | ரூ. | 25 |
| தோமாலை ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |
| அர்ச்சனை (ஸஹஸ்ரநாமம் அஷ்டோத்தரம்) பிறகு தரிசனம் | ,, | 4 |
| ஏகாந்த ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| பூலங்கி ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| திருமஞ்சனம் ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |

### கைங்கர்யங்கள் (செய்து வைப்பது)

| | | |
|---|---|---|
| ஆமந்த்ரணோத்ஸவம் | ,, | 200 |
| பூலங்கி ஸேவை | ,, | 60 |
| திருமஞ்சனம் | ,, | 450 |
| கம்பூராக் கிண்ணி | ,, | 250 |
| புனுகுசட்டம் கிண்ணி | ,, | 100 |
| கஸ்தூரிக் கிண்ணி | ,, | 100 |
| ஜாபாராக் கிண்ணி | ,, | 100 |
| ஸஹஸ்ர கலசாபிஷேகம் | ,, | 2500 |
| திருப்பாவாடை | ,, | 5000 |
| கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ,, | 1745 |

### உத்ஸவக் கட்டணங்கள்

| | | |
|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ,, | 2500 |
| பிரம்மோத்ஸவம் | ,, | 750 |
| கல்யாண உத்ஸவம் | ,, | 1000 |
| ஊஞ்சல் சேவை | ,, | 1000 |
| தெப்போற்சவம் | ,, | 1500 |

### வாஹனங்கள்

| | | |
|---|---|---|
| ஸர்வபூபாலம் வஜ்ரகவச சேவை 72+1 (ஹாரத்தி) | ,, | 73 |
| ஸர்வபூபாலம், கல்பவ்ருக்ஷம், பெரிய சேஷவாஹனம் ஸூர்யப்ரபை, புஷ்பரதம், முத்துப்பந்தல், தங்கக்கருடவாஹனம் தனித்தனி 62+1 (ஹாரத்தி) | ரூ. | 63 |
| வெள்ளி கருடவாஹனம், ஹனுமந்த வாஹனம், சின்ன சேஷவாஹனம், குதிரை வாஹனம், ஸிம்மவாஹனம், ஹம்ஸ வாஹனம், சந்திரப்பிரபை, யானை வாஹனம் தனித்தனி 32+1 (ஹாரத்தி) | ,, | 33 |

### பிரஸாதங்கள் (கால் சோலா தளிகை ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| ததியோதனம் | ,, | 40 |
| புளிஹோரை | ,, | 50 |
| பொங்கல் | ,, | 55 |
| சர்க்கரைப் பொங்கல் | ,, | 65 |
| ஸாகர்பாத் | ,, | 80 |
| கேஸரிபாத் | ,, | 90 |
| பாயஸம் | ,, | 85 |
| சீரா | ,, | 155 |

### படிகள் (படி ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| லட்டு | ,, | 450 |
| வடை | ,, | 250 |
| போளி | ,, | 225 |
| தோசை | ,, | 100 |
| ஸுகியம் | ,, | 200 |
| ஜிலேபி | ,, | 450 |
| அப்பம் | ,, | 230 |
| தேன்குழல் | ,, | 200 |

### நித்திய ஸேவைகள்

| | | |
|---|---|---|
| நித்திய கற்பூர ஹாரத்தி | ,, | 21 |
| நித்திய நவநீத ஹாரத்தி | ,, | 42 |
| நித்திய அர்ச்சனை | ,, | 42 |

குறிப்பு: ஸஹஸ்ர கலசாபிஷேகம் ஒவ்வொரு புதன்கிழமையும், திருப்பாவாடை ஒவ்வொரு வியாழக்கிழமையும் நடைபெறும்.

மற்றைய விவரங்களுக்கு கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரியுடன் தொடர்புகொள்ளுக.

செயலாட்சித் தலைவர்,
திருமலை திருப்பதி தேவஸ்தானம்,
திருப்பதி 517501.